# புறப்பொருளிலக்கணக்

## கலைச்சொல்துறை விளக்க

## அகராதி



பாவலரேறு ச.பாலசுந்தரம்

தமிழ் வாழ்க

# புறப்பொருள் இலக்கணக் கலைச் சொல் - துறை

## பொருள் விளக்க அகராதி

*ஆசிரியர்*

பாவலரேறு ச.பாலசுந்தரம்

தொல்காப்பிய ஆராய்ச்சிக் காண்டிகை உரையாசிரியர்

***தாமரை வெளியீட்டகம்***

**367, *மேலவீதி, தஞ்சாவூர்* - 9.**

நூலாசிரியன் சொந்த வெளியீடு
ஆண்டு-நவம்- 1999
பக்கம் - 88

காணிக்கை

என் இளவல்

ச. முத்துக்கிருட்டினன்

அவர்கள் நினைவுக்கு

விலை உருபா. 25/=

(1)

அச்சிட்டோர் :-

லக்ஷ்மி பிரிண்டர்ஸ்,
1086, காக்கா வட்டாரம்,
மேலவீதி, தஞ்சாவூர் - 9.
போன் - 53141

# புறப்பொருள் இலக்கணக் கலைக்களஞ்சியம் துறை - பொருள் விளக்க அகராதி

**பாயிர உரை :** - அகம்புறம் என்பவை அகங்கை புறங்கை என்பது போல ஒரு பொருளின் முன்தோற்றமும் பின் தோற்றமுமாம். உள் தோற்றம் வெளித்தோற்றம் என்பது போல அகப்பகுதியும் புறப்பகுதியுமாகும்.

மக்கள் ஒழுகலாற்றினை அம்மக்கள் பயன் கொள்ளுமாறு, நலந்தீங்குகளை உள்ளுறையாகச் சுட்டிச் சுவையும் கற்பனையும், சிந்தனைவளமும் தோன்ற அவ்வத்துறைகளில் வல்லோரான் படைக்கப்பெறும் கலைகளுள் மொழி வாயிலாகப் படைக்கப் பெறுவது இலக்கியம் என்ப. அவ்விலக்கியம் காலத்தால் நிலை பெறுதற்குரிய நெறிமுறைகளை மரபோடு வகுத்துரைப்பது அதற்குரிய இலக்கணம் என்ப. எனவே, இலக்கணம் என்பது இலக்கியத்தின் உள்ளும் புறமுமாகிய உறப்புக்களை விளக்கும் அறிவுக் கருவி என்பது விளங்கும். அக்கருவியால் விளக்கப்பெறுவது மக்களின் வாழ்க்கை. அவ் வாழ்க்கை அமைப்பினைத் தமிழ்ச் சான்றோர் பொருள் எனக் குறியீடு செய்து வழங்கினர்.

மக்கள் வாழ்க்கை என்பது ஒராடவனும் பெண்டும் இணைந்து இன்பந்துய்த்து மக்களைப் பெற்று மகிழ்வதும் அவ் இன்பமும் மகிழ்வும் நிகழத் துணைபுரியும் பொருள்களை ஆக்கலும் காத்தலும் வழங்கலும் அவற்றிற்கு இடையூறுநேரின் அதனைத் தடுத்தலும் அடக்கலும் அழித்தலும் அதனாற் பேறும் புகழும் எய்துதலாகும். அங்ஙனம் ஒருவனும் ஒருத்தியும் இணைந்தும் பிரிந்தும் இன்பதுன்பங்களை எய்தும் வாழ்வு அவர்தம் இல்லத்தளவில் நிகழ்தலான் அதனை அக வாழ்வென்றும் அவ் அக வாழ்விற்குத் துணைபுரியும் பொருள்களை ஈட்டலும் காத்தலும் வகுத்தலும் பிறரொடு கூடியும் இகலியும் நிகழ்தலான் அதனைப் புறவாழ்வென்றும் சான்றோர் வகுத்து அவற்றை அகப்பொருள் புறப்பொருள் என இலக்கணக் குறியீடாக வழங்கினர்.

மக்கள் பண்பாடும் நாகரிகமும் வளர வளரப் பல்வேறு சமுதாய அமைப்பு முறைகள் தோன்றும். அரசு, ஆளும் முறை அரசு அமைப்பு, ஆள்வோர் ஆளப்படுவோர் அறிவுத்துணைபுரிவோர் படைத்துணைபுரிவோர் படைப்போர், அவற்றைப் பல்வேறிடங்களுக்குக் கொண்டு சென்று ஈடுபெற்று வழங்குவோர் முதலானோர் புரியும் தொழிலும் பணியும் காரணமாகப் பல்வேறு இனங்களாக வகைப்படுவர். நல்லறிவுடையோர் கல்வியாளர், புலவோர் முதலானோர்

போற்றப்பெறுவர். சிந்தனையாளர் மன்னர் முதலானோரை நெறிப்படுத்துவர். அறிவர்களையும் மறவீறுடையாரையும் புலவோரையும் கலைஞர்களையும் அரசர் பேணிக்காப்பர். நிலமும் வளமும் தலைமைப்படும் காரணமாக மன்னர்களுள் பகையும் அது காரணமாகப் போர்களும் நிகழும். போரில் வெல்வோர் பாராட்டப்பெறுவர் தோற்றோர் அடிமைப்படுத்தப்படுவர். இவையும் அவைபோல்வனவும் இலக்கணநோக்கிற் புறப்பொருள் எனப்படும். மற்றும் சிந்தனைத் தெளிவும் மெய்யுணர்வும் காரணமாகப் பொருட்பற்று நீங்கித் துறவு பூணலும் அருள்மேம்படுதலும் இன்னபிறவும் புறப்பொருளுள் அடங்கும். சுருங்கக்கூறின் ஒருவனும் ஒருத்தியும் இணைந்து இன்புற்று வாழும் மனை வாழ்வு தவிர்த்தபிறவெல்லாம் புறப்பொருள் எனப்படும்.

புறப்பொருள் என்பது அகப்பொருளின் மறுபக்கமாதலின் அகப்பொருட்கு ஓதப்படும் இலக்கண நெறிமுறைகள்யாவும் புறப் பொருளுக்கும் ஒக்கும் என்பது தானே பெறப்படும். அம்முறைமை பற்றிப் பொருளிலக்கணம் வரைந்த சான்றோர்கள் அக ஒழுகலாற்றினை முதல்கரு உரிப்பொருள்களின் அடிப்படையில் ஏழுதிணைகளாக வகுத்தமைக்கு ஏற்பப் புறத்திணைகளையும் ஏழாக வகுத்தனர். மக்களின் ஒழுகலாறுகளை அகத்திணையுள் கூற்றும் கிளவியுமாகவும் புறத்திணையுள் துறைகளாகவும் வகுத்தோதினர்.

அகத்திணைகள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என ஏழாகும். இவற்றுள் முதல் ஐந்து திணைகளை அகனைந்திணை என்பர். அதனான் கைக்கிளை, பெருந்திணை என்னும் இரண்டனையும் அகப்புறத்திணைகளாக ஒரு சாரார் கூறுப. இவ் ஏழற்கும் முறையே உரிய புறத்திணைகள் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், காஞ்சி என்பனவாகும். இவற்றுள் முதல் ஐந்தனையும் புறத்திணைகள் என்ப. பாடாண்டிணை காஞ்சித்திணைகளைப் புறப்புறம் என்ப ஒரு சாரார் புறத்திணைகள் ஒவ்வொன்றைப் பற்றியும் பல நூல்கள் படைக்கப் பெற்றிருந்தன என்பது தொல்காப்பியத்தால் புலனாகின்றது. அந்நூல் யாதொன்றும் இற்றைக்குக் காணுமாறில்லை. அவற்றையெல்லாம் ஆராய்ந்து உலகியல் வழக்கினையும் ஓர்ந்து சுருக்கமாக வரையப்பட்ட நூல் தொல்காப்பியமாகும். இற்றைக்கு வழக்கிலுள்ள இலக்கண நூல்களுள் தொன்மையானும், செம்மையானும் சிறந்து நிற்கும் தமிழிலக்கண நூல் தொல்காப்பியமாகும்.

அடுத்து, தொல்காப்பியத்தொடு பயிலப்பெற்று வரும் நூல் புறப்பொருள் வெண்பாமாலையாகும். இந்நூல் பன்னிருபடலம் என்னும் நூலைப் பின்பற்றி இயற்றப்பெற்றதாக அதன்பாயிரம் கூறுகின்றது. அதனை ஒட்டிப் பன்னிரண்டு படலங்களாக வகுத்துச் செய்யப்பட்டுள்ளது. பன்னிருபடலம் இற்றைக்குக்

கிட்டவில்லை. சில நூற்பாக்கள் தொல்காப்பிய உரையுள் இளம்பூரணரால் சுட்டப்பட்டுள்ளன. பன்னிருபடலத்துள் வெட்சிப் படலத்தைத் தொல்காப்பியனார் இயற்றினார் என்று சிலர் கருதுவதாகவும் அது பொருந்தாது என்றும் இளம்பூரணார் வரைந்துள்ளார்.

புறப்பொருள் வெண்பாமாலைப் பாயிரத்தால் பன்னிரு படலம் அகத்தியர் மாணவர் பன்னிருவரால் இயற்றப்பெற்றது எனப் புலனாகின்றது. அதனான் அது பன்னிரண்டு படலங்களாக அமைவதாயிற்று என்றும் தெரிகின்றது. புறத்திணை ஏழனைப் பன்னிரண்டாகக் கொள்ள நேர்ந்தமையான் வெட்சி வஞ்சி, உழிஞை மூன்றையும் முனைவோர் தடுப்போர் என இரண்டாகக் கொண்டு வெட்சிக்கு எதிர் கரந்தை, வஞ்சிக்கு எதிர் காஞ்சி, உழிஞைக்கு எதிர் நொச்சி எனக்கூறுகின்றது. காஞ்சியை வஞ்சிக்கு மறுதலைத்திணையாகக் கொள்ளப்பட்டமையான் நிலையாமையை உணர்த்தும் காஞ்சித்திணை தனியே கூறப்படவில்லை. மற்று கைக்கிளையும் பெருந்திணையும் அகப்புறத்திணைகளாகக் கொள்ளப்பட்டமையான் அவை இரண்டும் தனித்தனிப் படலமாக அமைந்துள்ளன. மேலும் பொதுவியல் என ஒருபடலத்தை வகுத்து அதனுள் எஞ்சிய புறப்பொருள் கருத்துக்கள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

பொதுவியற் படலத்துள் பொதுவியல், சிறப்பிற் பொதுவியல், காஞ்சிப்பொதுவியல், முல்லைப் பொதுவியல் என நான்கு வகைகளும் கைக்கிளைப் படலத்துள் ஆண்பாற் கூற்று, பெண்பாற் கூற்று என இரண்டு வகைகளும் பெருந்திணைப்படலத்துள் பெண்பாற் கூற்று இருபாற் பெருந்திணை என இரண்டு வகையும் அமைந்துள்ளன. இறுதியாக ஒழிபு என்னும் தலைப்பில் சில துறைகள் கூறப்பட்டுள்ளன. ஒழிபு என்பது பாடாண் ஒழிபியல் என்று இருத்தல் வேண்டுமென்பது அதன் பாட பேதக் குறிப்பாற் புலனாகின்றது.

பொதுவியல் என்பதை ஒருதிணையாகக் கொள்வது இலக்கண நெறிக்கு ஒவ்வாத தொன்றாகும். இம் மடைமாற்றத்தைப் பிழை எனக் கருதாமல் இடைக்காலத்தார் சில புறநானூற்றுச் செய்யுள்கட்குத்திணை பொதுவியல் எனக்குறித்துச் சென்றனர். இந்நாள்வரை அப்பிழையான கருத்தே மாணவர்க்குப் பயிற்றுவிக்கப்பட்டுவருகிறது. மற்றும் புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் சில துறைகளுக்கு இதுவுமது என்னும் தலைப்பில் ஒன்றற்கு மேற்பட்ட இலக்கணங்களைக் கூறுகின்றார். சில துறைகள் ஒன்றற் மேற்பட்ட திணைகளில் அமைந்துள்ளன.

எடுத்துக்காட்டாக், "கொற்றவைநிலை" என்னும் துறை வெட்சித்திணையிலும் காஞ்சித்திணையிலும் இடம்பெற்றுள்ளது. போர்கருதிச் செல்லும் மறவர்கள் வெற்றிதரும் தெய்வத்தை வழிபடலும் வெற்றிதர வேண்டுதலும்

பொருந்துமாயினும் அவ்வத்திணை நோக்கிற் கேற்பச் சிறிது வேறுபட்ட துறைத் தலைப்புக்களை அமைத்தலே இலக்கண நெறியாகும். வெட்சிக் கொற்றவை நிலைக்கு இலக்கணம் கூறுமிடத்து "ஒளியின் நீங்கா விறற் படையோள் அளியின் நீங்கா அருளுரைத்தன்று" என்றும் வஞ்சிக் கொற்றவை நிலைக்குக் கூறுமிடத்து.

நீடோளான் வென்றி கொள்கென நிறைமண்டை வலனுயரிக்
கூடாரைப் புறங்காணும் கொற்றவை நிலை உரைத்தன்று"

என்றும் இதற்கே இதுவுமது என்னுத் தலைப்பில்

"மைந்துடையாடவர் செய்தொழில் கூறலும்
அந்தமில் புலவர் அதுவென மொழிப"

என்றும் கூறுகிறார். இவற்றிற்கு மேற்கோளாக அமைந்துள்ள வெண்பாக் கருத்துக்களை நோக்குமிடத்து. வெட்சியில் அத்தலைப்பு முழுதும் பொருந்துகின்றது. வஞ்சியில் முதற்கருத்துச் சிறிது வேறுபடுகின்றது இரண்டாவது கருத்து முழுவதும் வேறுபடுகின்றது. இரண்டாவது கருத்தை ஊன்றி நோக்கின் அது தும்பைத் திணைக்கு ஏற்றதாக உள்ளது. இங்ஙனம் வருவனவற்றைத் தொல்காப்பித்தொடு ஒப்பு நோக்கிப் புறப்பொருள் இலக்கணத்தை மாணாக்கர் ஓர்ந்து உணர்தல் வேண்டும்.

தமிழ்மொழிக்கே சிறந்துரிமையாகத் திகழும் பொருளிலக்கணத்தைத் தமிழார்வமுடைய யாவரும் நூலளவேனும் அறிந்துணர வேண்டும் என்னும் நோக்கத்தான் பொருளிலக்கணக்கலைச் சொற்கள் கிளவிகள், துறைகள் பற்றிய பொருள்விளக்க அகராதியை இயற்ற முற்பட்டபோது அகப்பொருள் பற்றியும் புறப்பொருள் பற்றியும் தனித்தனியாக அமைப்பின் மாணாக்கர் எளிதில் பயில ஏதுவாக இருக்குமெனக்கருதி இற்றைய மாணாக்கர்க்குப் பெரிதும் பயிற்றுவிக்கப் பெறும் அகப்பொருள் நூல்களாகிய தொல்காப்பியம், இறையனார் அகப்பொரள் நம்பியக் பொருள் ஆகிய மூன்று நூல்களிலும் வழங்கப்பெறும் கலைச்சொற்கள் முதலியவற்றைத் தொகுத்து அகப்பொருளிலக்கணக்கலைச்சொல் – கிளவி, துறைகளின் பொருள் விளக்க அகராதியை எழுதினேன். அம்முறையில் புறப்பொருளிலக்கணக் கலைச்சொற்கள் துறைகளின் பொருள் விளக்க அகராதியை இயற்றுமிடத்து இற்றைக்குப் பெரிதும் மாணாக்கர்க்குப் பயிற்றுவிக்கப் பெறும் தொல்காப்பியப் புறத்திணையியலையும், புறப்பொருள் வெண்பாமாலையையும் எடுத்துக்கொண்டேன். இவற்றுள் காணப்படும் கலைச்சொற்களே இலக்கணவிளக்க நூலிலும் அமைந்துள்ளமையான் அவை இரண்டும் இவற்றுள் அடங்கும். அவ்விருநூல்களிலும் அமைந்துள்ள கலைச் சொற்களே தொகுக்கப் பெற்று இவ்வகராதியாக அமைந்துள்ளது. இவ்வகராதி புறப்பொருளிலக்கணத்தைப் பயிற்றுவிக்கும் ஆசிரியர், பயிலும் மாணவர்கட்கு ஒரு கையேடு என்னும் அளவிற்கு எழுதப் பெற்றதாகலின் அந்நூல்களை விரிவாகத் தெரிந்து கொள்ள இவ்வகராதி

பெரிதும் துணைபுரியும் என்று நம்புகின்றேன். கலைச் சொற்களுக்கும் துறைகளுக்கும் கூறப்பெற்ற விளக்கங்களே அவ்வப்பகுதிகளைப் புரிந்து கொள்ளப் போதுமானது என்னும் கருத்தானும் விரிவஞ்சியும் எடுத்துக்காட்டுச் செய்யுட்களும், வெண்பாக்களும் தரப்படவில்லை. அவற்றை அந்நூல்களிற் கண்டு தெளிதல் மாணாக்கர் கடமையாகும்.

இவ் அகராதியில் விளக்கப்பெறும் ஒவ்வொரு தலைப்புச் சொற்களின் அடைப்புக் குறியில் நூற்பெயர் சுருக்கம் தரப்பட்டுள்ளது.

<u>குறியீடுகளின் விளக்கம்</u>

தொல் – புற – 1 : தொல்காப்பியம் புறத்திணை இயல் நூற்பா . 1
வெட் – பு – வெ : வெட்சிப்படலம் புறப்பொருள் வெண்பாமாலை.
கர – பு – வெ கரந்தைப் படலம் " "
வஞ் – பு – வெ வஞ்சிப்படலம் " "
காஞ்– பு– வெ காஞ்சிப்படலம் " "
உழி – பு – வெ உழிஞைப்படலம் " "
நொச் – பு – வெ நொச்சிப்படலம் " "
தும் – பு – வெ தும்பைப் படலம் " "
வாகை – பு – வெ வாகைக்கடலம் " "
பாடாண் – பு – வெ பாடாண் படலம் " "
பொது – பு – வெ பொதுவியற் படலம் " "
சிற – பொது – பு – வெ சிறப்பிற் பொதுவியற் பால " "
காஞ் – பொது – பு – வெ காஞ்சிப் பொதுவியற் பால " "
முல் –பொது – பு – வெ முல்லைப் பொதுவியற் பால " "
கைக் – பு – வெ கைக்கிளைப் படலம் " "
பெரு – பு – வெ பெருந்திணைப்படலம் " "
இரு பெரு – பு – வெ இருபாற் பெருந்திணை " "
ஒழிபு – பு – வெ ஒழிபு " "

தொல்காப்பியச் சொற்களுக்குரிய திணைகளும், கைக்கிளை. பெருந்திணைகளுள் ஆண்பாற்கூற்று – பெண்பாற் கூற்று என்னும் பிரிவுகளும் – அவ்வச் சொற்பொருள் விளக்கத்துள் தரப்பட்டுள்ளன. தொல்காப்பிய நூற்பா எண்கள் மர்ரே கம்பெனியாரின்தொல்காப்பியப் பதிப்பிற் கண்டவை தொல்காப்பிய ஆராய்ச்சிக் காண்டிகையுரை எண்கள் சிறிது வேறுபாடும் நூற்பாவின் தொடர்களைக் கொண்டு பிற உரைகளின் எண்களைத் தெரிந்து கொள்ளல் வேண்டும்.

## புறப்பொருளிலக்கணக் கலைச் சொற்களும் துறைப்பெயர்களும்
## தொல்காப்பியம்

புறம் (புற – 1)
புறத்திணை (புற – 1)
வெட்சி (புற – 1)
உட்குவரத் தோன்றல் (புற – 1)
வேந்து விடுமுனைஞர் (புற – 2)
ஆதந்தோம்பல் "
வேற்றுப்புலம் "
களவு "
மேவற்றாகும் "
படையியங்கரவம் (புற – 3 )
பாக்கத்துவிரிச்சி "
புடைகெடப் போகிய செலவு "
ஒற்றின் ஆகிய வேய் "
புறதிறை "
ஊர் கொலை "
ஆ கோள் "
பூசல் மாற்று "
நோயின்றுய்த்தல் "
நுவல் வழித்தோற்றம் "
தந்துநிறை "
பாதீடு "
உண்டாட்டு "
கொடை "
குடிநிலை (துடி நிலை) (புற – 4)
கொற்றவை நிலை "
வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட்டு (புற – 5)
வெறியாட்டயர்ந்த காந்தள் "
போந்தை, வேம்பு, ஆர் "
மா வருந்தானையர் மலைந்த பூ "
வள்ளி (வாடா வள்ளி) "
கழல் நிலை "
உன்ன நிலை "
உடல் நிலை "
உடல் வேந்தடுக்கிய உன்னநிலை "
மாயோன் மேய மன்பெருஞ்சிறப்பின்
பூவை நிலை (புற – 5)
ஆரமர் ஓட்டல் "
ஆபெயர்த்துத்தருதல் "
சீர்சால் வேந்தன் சிறப்பெடுத்து
ரைத்தல் "
தலைத்தாள் நெடுமொழி தன்னொடு
கூறல் "
நெடுமொழி கூறல் "
கரந்தை "
வருதார்தாங்கல் "
வாள் வாய்த்துக்கவிழ்தல் "
பிள்ளைநிலை (இரு வகைப்பட்ட பிள்ளை
நிலை) "
பிள்ளையாட்டு (புற – 5)
காட்சி "
கால்கோள் "
நீர்ப்படை "
நடுதல் "
பெரும்படை "
வாழ்த்தல் "
இரு மூன்று மரபின்கல் "
வெட்சித்திணைக்குரிய முதல் கரு உரிப்
பொருள்
வெட்சித் திணை குறிஞ்சிக்குப்
புறனாயவாறு
காஞ்சி (புற – 6)
எஞ்சா மண்ணசை வேந்தன் "
அஞ்சுதகத் தலைச் செல்லல் "
இயங்குபடையரவம் (புற – 7)
எரியரந்தெடுத்தல் "
வயங்கல் எய்திய பெருமை "

கொடை "

அடுத்தூர்ந்தட்ட கொற்றம் "

மாராயம் பெற்ற நெடு மொழி "

பேராண்பக்கம் "

வருவிசைப் புனலைக்கற்சிறை போல – ஒருவன் தாங்கிய பெருமை "

பிண்டம் "

பெருஞ்சோற்றுநிலை "

வென்றோர் விளக்கம் "

தோற்றோர் தேய்வு "

தழிஞ்சி (அழிபடை தட்டோர்) "

வஞ்சிக்குரிய முதல்,கரு,உரிப்பொருள்

வஞ்சித்திணை முல்லைக்குப் புறனாயவாறு "

உழிஞை முழு முதலரணம் முற்றல் "

முழு முதலரணம் கோடல் "

கொள்ளார் தேஎம் குறித்த் கொற்றம் (புற – 10)

உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பு "

தொல்லெயிற் கிவர்தல் "

தோலின் பெருக்கம் (தோல்) "

அகத்தோன் செல்வம் "

புறத்தோன் அணங்கிய பக்கம் "

ஒரு தான் மண்டிய 'குறுமை' "

வருபகை பேணார் ஆரெயில் "

குடை நாட் கோள் (புற – 11)

வாணாட் கோள் "

ஏணிமிசை மயக்கம் "

முற்றிய முதிர்வு "

அகத்தோன் வீழ்ந்த நொச்சி "

நொச்சி "

புறத்தோன் வீழ்ந்த புதுமை "

நீர்ச்செரு வீழ்ந்த பாசி "

பாசிநிலை "

பாசி மறன் "

மதில் மிசைக் கிவர்தல் "

இகல்மதிற் குடுமி கொண்ட மண்ணுமங்கலம் "

வாள் மண்ணுமங்கலம் "

தொகை நிலை "

உழிஞைக் குரிய முதல் கரு உரிப்பொருள்

உழிஞைத்திணை மருதத்திற்குப் புறனாயவாறு

தும்பை (புற – 12)

மைந்து பொருள் "

சென்று தலையழித்தல் (புற – 12)

கணையும் வேலும் துணையுற மொய்த்தல் (புற – 13)

சென்ற உயிரின் நின்றயாக்கை "

இரு நிலந்தீண்டா அருநிலை "

அட்டையாடல் "

தானைநிலை (புற – 14)

யானை நிலை "

குதிரை நிலை "

நோனார் "

வேன் மிகு தானை "

தார் நிலை "

இருவர் தலைவர் தபுதிப்பக்கம் "

கூழை தாங்கிய எருமை "

எருமை மறம் "

படையறுத்துப் பாழி கொள்ளும் ஏமம் "

களிறெறிந் தெதிர்ந்தோர் பாடு "

பட்ட வேந்தன் "

அட்ட வேந்தன் "

வாளோர் ஆடும் அமலை "

வாள் வாய்த்தல் "

இருவரும் ஒழியாத் தொகை நிலை "

ஒருவன் மண்டிய நல்லிசை "

செருவகம் "

ஒள்வாள்வீசிய நூழில் – நூழிலாட்டு "

தும்பைக்குரிய முதல் கரு உரிப்பொருள்

தும்பைத்திணை நெய்தற் குப்புறனாயவாறு
வாகை – (புற – 15)
தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப் பாகுபட மிகுதிப் படுத்தல் (புற – 15)
அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கம்(புற –16)
ஐவகை மரபின் அரசர் பக்கம் "
இரு மூன்று மரபின் ஏனோர் பக்கம் "
மறுவில் செய்தி மூவகைக் காலம் "
நெறியின் ஆற்றிய அறிவன் தேயம் "
நாலிருவழக்கின் தாபதப் பக்கம் "
பாலறி மரபின் பொருநர் கண்ணும் "
அனைநிலைவகை – மனை நிலை வகை (புற – 16)
கூதிர்ப் பாசறை (புற – 17)
வேனிற் பாசறை "
ஏரோர் களவழி "
தேரோர் களவெழி "
முன்றேர்க் குரவை "
பின்றேர்க் குரவை "
பெரும்பகை தாங்கும் வேலினானும் "
அரும்பகை தாங்கும் ஆற்றலானும் "
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கம் "
ஒல்லார் நாணப் பெரியவர் கண்ணிச் சொல்லிய வகை "
தொல்லுயிர் வழங்கிய 'அவிப்பலி' அவிப்பலி "
ஒல்லார் இடவயின் புல்லிய பாங்கு "
பகட்டினானும் ஆவினானும் துகள்தீர் சிறப்பின் சான்றோர் பக்கம் "
கடிமனை நீத்த பால் "
கட்டில் நீத்த பால் "
எட்டு வகை நுதலிய அவையகத் தானும் "
கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமையானும் "
வண்புகழ்க் கொடைமையானும் "
பிழைத்தோர்த் தாங்கும் காவலானும் "
பொருளொடு புணர்ந்த பக்கம் "
அருளொடு புணர்ந்த பக்கம் "
காமம் நீத்த பால் "
வாகைக் குரிய முதல் கருஉரிப் பொருள்
வாகைத் திணை பாலைக்குப் புறனாய வாறு
காஞ்சி (புற – 18)
நில்லா உலகம் புல்லிய நெறித்து "
மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமை (புற – 19)
கழிந்தோர் ஒழிந் தோர்க்குக் காட்டிய முதுமை (புற – 19)
புண் கிழித்து முடியும் மறம் "
ஏமச் சற்றம் "
புண்ணோன் "
போய் ஓம்பிய பேய்ப்பக்கம் (புற – 19)
இன்னன் என்றிரங்கிய மன்னை "
மன்னைக் காஞ்சி "
வஞ்சினக் காஞ்சி "
நீத்த கணவன் "
துன்னுதல் கடிந்த தொடாக் காஞ்சி "
ஆஞ்சிக் காஞ்சி "
மகட் பாடஞ்சிய – மகட் பாற் காஞ்சி "
தலையொடு முடிதல்நிலை "
மாய்ந்த மகனை சுற்றிய சுற்றம் ஆய்ந்த பூசல் மயக்கம் "
தாமே எய்திய தாங்கரும் பையுள் "
கணவனொடு முடிந்த படர்ச்சி "
செல்வோர்செப்பிய மூதானந்தம் "
மூதானந்தம் "
நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து தனிமகள் புலம்பிய முதுபாலை (புற – 19)
கழிந்தோர் தேஎத்துக் கழிபடர் உறீஇ ஒழிந்தோர் புலம்பிய கையறுநிலை "
காதலி இழந்த புதார நிலை "
காதலன் இழந்த தாபத நிலை "

நல்லோள் கணவனொடு தனியழல் புகீஇச்
சொல்லிடையிட்ட பாலை நிலை 19
மாய்பெருஞ்சிறப்பிற் புதல்வற் பயந்த தாய்
தப வரூஉம் தலைப்பெயல் நிலை 19
காடு வாழ்த்து "
காஞ்சி பெருந்திணைக்குப் புறனாய வாறு
பாடாண்டிணை – பாடாண்பகுதி(புற–20)
அமரர் கண்முடியும் அறுவகை (புற – 21)
புரை தீர் காமம் புல்லிய வகை "
வழக்கியல் மருங்கின் வகைபடநிலைஇப்
பரவலும்பு கழ்ச்சியும் கருதிய பாங்கு – 22
முன்னோர் கூறிய குறிப்பு "
செந்துறை வண்ணப்பகுதி "
காமப் பகுதி கடவுளும் வரையார்(புற –23)
" ஏனோர் பாங்கினும் வரையரார் "
குழவி மருங்கினும் கிழவதாகும் (புற –24)
ஊரோடு தோற்றமும் உரிந்து (புற –25)
மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழி
(புற–26)
கொடிநிலை கந்தழி வள்ளி (புற – 27)
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்று "
கடவுள் வாழ்த்தொடு கண்ணியவரும் "
கொற்றவள்ளை (பாடாண்) (புற – 28)
கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல்
(புற – 29)
அடுத்தூர்ந் தெய்திய இயன் மொழி
வாழ்த்து "
வாயில் காவலர்க்குரைத்த கடைநிலை"
கண்படைகண்ணிய கண்படைநிலை "
கபிலை கண்ணிய வேள்வி நிலை "
வேலின் நோக்கிய விளக்குநிலை "
வாயுறை வாழ்த்து "
செவியறி வுறூஉ "
புறநிலை வாழ்த்து "
கைக்கிளை வாழ்த்து "
சூதர் ஏந்திய துயிலெடைநிலை (புற – 30)
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி பெற்ற
பெருவளம் பெறாஅர்க்கறி வுறீஇச்
சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கம்
(புற – 30)
கூத்தராற்றுப்படை "
பாணராற்றுப்படை "
பொருநராற்றுப்படை "
விறலியாற்றுப்படை "
முருகாற்றுப்படை "
பிறந்தநாள்வயின் பெருமங்கலம் "
மன்னெயில் அழித்த மண்ணுமங்கலம்"
பரிசில் கடைஇய கடைக்கூட்டுநிலை"
பெற்ற பின்னரும் பெருவளனேத்தி
நடைவயின் தோன்றிய இருவகை
விடையும் நாளும் புள்ளும் பிறவற்றின்
நிமித்தமும் காலங்கண்ணிய ஒப்படை
காலம் மூன்றொடு கண்ணிய வரும்
பாடாண்டிணை கைக்கிளைத்
திணைக்குப் புறனாயவாறு
புறத் திணை மாந்தர்களாகிய நாற்
பாலார்க்கும் உரிய அடையாளமும்
செயலும் – மரபியல் – 69 – 83

# புறப்பொருள் வெண்பாமாலை

## புறப்பொருள் வெண்பாமாலை - பாயிரம்

### *வெட்சித்திணை 20. துறைகள்*

வெட்சித்திணை மன்னுறு தொழில்
வெட்சித்திணை தன்னுறு தொழில்
வெட்சியரவம்

விரிச்சி
செலவு
வேய்
புறத்திணை
ஊர் கொலை
ஆகோள் ..
பூசல் மாற்று
சுரத் தோற்றம்
தந்து நிறை
பாதீடு
உண்டாட்டு
கொடை
புலனறி சிறப்பு
பிள்ளை வழக்கு
துடிநிலை
கொற்றவை நிலை
வெறியாட்டு

*கரந்தைத்திணை 14 துறைகள்*

கரந்தை அரவம்
அதரிடைச் செலவு
போர் மலைதல்
புண்ணொடு வருதல்
போர்க் களத் தொழிதல்
ஆளெறி பிள்ளை
பிள்ளைத் தெளிவு
பிள்ளையாட்டு
கையறுநிலை
நெடுமொழி கூறல்
பிள்ளைப் பெயர்ச்சி
வேத்தியல் மலிவு
குடிநிலை
வஞ்சித் திணை
வஞ்சியரவம்
குடை நிலை
வாணிலை
கொற்றவைநிலை
கொற்ற வஞ்சி
கொற்ற வள்ளை
பேராண் வஞ்சி
மாராய வஞ்சி
நெடு மொழி வஞ்சி
முது மொழி வஞ்சி
உழபுல வஞ்சி
மழபுல வஞ்சி
கொடை வஞ்சி
குறு வஞ்சி
ஒரு தனி நிலை
தழிஞ்சி
பாசறை நிலை
பெரு வஞ்சி
பெருஞ்சோற்றுநிலை
நல்லிசை வஞ்சி
காஞ்சித்திணை
காஞ்சியதிர்வு
தழிஞ்சி
படை வழக்கு – பெரும்படை
பெருங்காஞ்சி
வாள் செலவு
குடைச்செலவு
வஞ்சினக் காஞ்சி
பூக்கோள் நிலை
தலைக் காஞ்சி
தலை மாராயம்
தலையொடு முடிதல்
புறக் காஞ்சி
பேய்நிலை
பேய்க் காஞ்சி
தொட்டகாஞ்சி
தொடாக் காஞ்சி
மன்னைக் காஞ்சி

கட் காஞ்சி
ஆஞ்சிக் காஞ்சி
மகட்பாற் காஞ்சி
முனைகடி முன்னிருப்பு

### நொச்சித் திணை

நொச்சி
மறனுடைப் பாசி
ஊர்ச் செரு
செருவிடை வீழ்தல்
குதிரை மறம்
எயிற் போர்
எயில் தனையழித்தல்
அழிபடை தாங்கல்
மகள் மறுத்து மொழிதல்

### உழிஞைத்திணை

குடைநாட்கோள்
வாள்நாட்கோள்
முரச உழிஞை
கொற்ற உழிஞை
அரச உரிஞை
கந்தழி
முற்றுழிஞை
காந்தள்
புறத்திணை
ஆரெயிலுழிஞை
தோலுழிஞை
குற்றுழிஞை
புறத்துழிஞை
பாசிநிலை
ஏணிநிலை
எயிற்பாசி
முது உழிஞை
அகத்துழிஞை
முற்றுமுதிர்வு
யானைகைக்கோள்
உழுதுவித்திடுதல்
வாள் மண்ணுநிலை
மண்ணுமங்கலம்
மகட்பாலிகல்
திறைகொண்டு பெயர்தல்
அடிப்படவிருத்தல்
தொகைநிலை

### தும்பைத்திணை

தானைமறம்
யானைமறம்
குதிரை மறம்
தார்நிலை
தேர்மறம்
பாண்பாட்டு
இருவரும் தபுநிலை
எருமை மறம்
ஏம எருமை
நூழிலாட்டு
முன்றேர்க் குரவை
பின்றேர்க்குரவை
பேய்க் குரவை
களிற்றுடனிலை
ஒள்வாளமலை
தானைநிலை
வெருவருநிலை
சிருங்காரநிலை
உவகைக் கலுழ்ச்சி
தன்னை வேட்டல்
தொகைநிலை

### வாகைத்திணை

வாகையரவம்
அரசவாகை
முரசவாகை
மறக்களவழி
களவேள்வி

முன்றேர்க் குரவை
பின்றேர்க்குரவை
பார்ப்பன வாகை
வாணிகவாகை
வேளாண்வாகை
பொருந வாகை
அறிவன் வாகை
தாபத வாவை
கூதிர்ப் பாசறை
வாடைப்பாசறை
அரச முல்லை
பார்ப்பன முல்லை
அவையமுல்லை
கணிவன் முல்லை
மூதின் முல்லை
ஏறான் முல்லை
வல்லான் முல்லை
காவல் முல்லை
பேராண் முல்லை
மற முல்லை
குடை முல்லை
கண்படை நிலை
அவிப்பலி
சால்பு முல்லை
கிணை நிலை
பொருளொடு புகறல்
அருளொடு நீங்கல்

### *பாடாண்டிணை*

பாடாண் பாட்டு
வாயில் நிலை
கடவுள் வாழ்த்து
பூவை நிலை
பரிசிற்றுறை
இயன் மொழி வாழ்த்து
கண்படை நிலை
துயிலெடைநிலை
மங்கல நிலை
விளக்குநிலை
கபிலை கண்ணிய புண்ணியநிலை
வேள்விநிலை
வெள்ளி நிலை
காடு வாழ்த்து
கிணைநிலை
களவழி வழ்த்து
வீற்றினி திருந்த பெருமங்கலம்
குடுமி களைந்த புகழ் சாற்று நிலை
மணமங்கலம்
பொலிவு மங்கலம்
நாண் மங்கலம்
பரிசில் நிலை
பரிசில் விடை
ஆள்வினை வேள்வி
பாணாற்றுப் படை
கூத்தராற்றுப் படை
பொருந ராற்றுப் படை
விறலியாற்றுப் படை
வாயுறை வாழ்த்து
செவியறிவுறூஉ
குடை மங்கலம்
வாள்மங்கலம்
மண்ணுமங்கலம்
ஓம்படை
புறநிலை வாழ்த்து
கந்தழி
வள்ளி
புலவராற்றுப்படை
புகழ்ந்தனர் பரவல்
பழிச்சினர் பணிதல்
கைக்கிளை
பெருந்திணை
புலவி பொருளாகத் தோன்றிய பாடாண் பாட்டு

கடவுள் மாட்டுக் கடவுட்பெண்டிர் நயந்த பக்கம்
கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம்
குழவிகட் டோன்றிய காமப் பகுதி
ஊரின்கட் டோன்றிய காமப்பகுதி

## பொதுவியற்படலம்

போந்தை
வேம்பு
ஆர்
உன்னநிலை
எழக நிலை
கழல் நிலை
கற்காண்டல்
கற்கோள் நிலை
கல் நீர்ப்படுத்தல்
கல் நடுதல்
கல்முறைபழிச்சல்
இற்கொண்டு புகுதல்

## சிறப்பிற் பொதுவியற்பால

முதுபாலை
சுரநடை
தபுதார நிலை
தாபத நிலை
தலைப் பெயல் நிலை
பூசல் மயக்கு
பாலைநிலை
மூதானந்தம்
ஆனந்தம்
ஆனந்தப் பையுள்
கையறுநிலை

## காஞ்சிப் பொதுவியற் பால

முதுமொழிக் காஞ்சி
பெருங்காஞ்சி
பொருண் மொழிக்காஞ்சி
புலவரேத்தும்புத்தேள் நாடு
முதுகாஞ்சி
காடுவாழ்த்து

## முல்லைப் பொதுவியற் பால

முல்லை
கார் முல்லை
தேர் முல்லை
நாண் முல்லை
இல்லாண் முல்லை
பாட்டு முல்லை
பான் முல்லை
கற்பு முல்லை

## கைக்கிளைத்திணை ஆண்பாற் கூற்று

காட்சி
ஐயம்
துணிவு
உட்கோள்
பயந்தோர்ப் பழிச்சல்
நலம் பாராட்டல்
நயப்புற்றிரங்கல்
புணரா விரக்கம்
வெளிப்பட விரத்தல்

## கைக்கிளைத்திணை - பெண்பாற்கூற்று

காண்டல்
நயத்தல்
உட்கோள்
மெலிதல்
மெலிவொடுவைகல்
காண்டல் வலித்தல்

பகல் முனிவுரைத்தல்
இரவு நீடு பருவரல்
கனவி னரற்றல்
நெஞ்சொடு மெலிதல்

## *பெருந்திணை - பெண் பாற்கூற்று*

வேட்கை முந்துறுத்தல்
பின்னிலை முயறல்
பிரிவிடை யரற்றல்
வரவெதிர்ந் திருத்தல்
வாராமைக் கழிதல்
இரவுத்தலை சேறல்
இல்லவை நகுதல்
புலவியுட் புலம்பல்
பொழுது கண்டிரங்கல்
பரத்தையை ஏசல்
கண்டுகண் சிவத்தல்
காதலிற் களித்தல்
கொண்டகம் புகுதல்
கூட்டத்துக் குழைதல்
ஊடலுள் நெகிழ்தல்
உரை கேட்டு நயத்தல்
பாடகச் சீறடி பணிந்தபின்னி ரங்கல்
பள்ளி மிசைத் தொடர்தல்
செல்கென விடுத்தல்

## *இருபாற் பெருந் திணை*

செலவழுங்கல்
மடலூர்தல்
தூதிடையாடல்
துயரவற் குரைத்தல்
கண்டுகை சோர்தல்
பருவம் மயங்கல்
ஆண்பாற் கிளவி
பெண்பாற் கிளவி
வெறியாட்டு
பாண்வரவுரைத்தல்
பரத்தை கூறல்
விறலி தோழிக்கு விளம்பல்
பரத்தைஇல் பாங்கி கண்டுரைத்தல்
பிறர் மனைத் துயின்றமை விறலி கூறல்
குற்றிசை
குறுங்கலி

## *ஒழிபு*

கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல்
வாணிக வென்றி
மல்வென்றி
உழவன் வென்றி
ஏறுகொள் வென்றி
கோழி வென்றி
தகர் வென்றி
யானை வென்றி
பூழ் வென்றி
சிவல் வென்றி
கிளி வென்றி
பூவை வென்றி
குதிரை வென்றி
தேர் வென்றி
யாழ் வென்றி
சூது வென்றி
ஆடல் வென்றி
பாடல் வென்றி
பிடி வென்றி
புறமும் புறப்புறமும்

# புறப்பொருளிலக்கணக் கலைச் சொல் — துறை பொருள் விளக்கம்

***அகத்துழிஞை*** (உழி—பு—வெ) அரணகத்திருக்கும் நொச்சிமறவரின் பகையழியுமாறு சினந்து உழிஞையார் அவரைப் போரிட்டு வென்றது.

***அகத்தோன் செல்வம்*** (தொல்—புற—10) உழிஞைத்திணை : பகைவரால் முற்றுகையிடப் பட்டுள்ள அரணகத்துள் இருக்கும் மன்னனின் தளராமைக்குக் காரணமாக அமைந்திருக்கும் உணவு முதலாய செல்வங்களின் வளம்.

***அகத்தோன் வீழ்ந்த நொச்சி*** (தொல்—புற—11) உழிஞைத்திணை பகைவரான்முற்றுகையிடப்பட்டுள்ள அரணகத்து மன்னன் அதனைத் தவிர்த்துக் கொள்ளுதற்கு விரும்பிப் போர் நிகழ்த்தல் — வீழ்ந்த நொச்சி = விரும்பிப்புரியும் போர்.

***அஞ்சுதகத் தலைச்செல்லல்*** வஞ்சித்திணை : (தொல்—புற—6) தன்நிலத்தை அகப் படுத்திய பகை மன்னன் அஞ்சிக் கலங்குமாறு அவன் நாட்டு எல்லைக்குள் புகுதல்.

***அட்ட வேந்தன் (தொல்-புற-14)*** : தும்பைத் திணை :—ஊர்ந்துவந்த யானையொடு பகைவனைக் கொன்றழித்த வேந்தன்.

***அடிப்பட விருத்தல் :*** (உழி—பு—வெ) நொச்சிமன்னன் சினம்மாறித் தன் நிலத்தை விரும்பிய பகை மன்னன் காவல் மறவர் எதிர்ந்த காலை வஞ்சி மறவர் அவரை மேற்சென்று பொருதழித்த வெற்றி மேம்பாடு.

***அதரிடைச்செலவு :*** (கரந்—பு—வெ) போரிடுவதற்கு ஆற்றாதவர் தவிர்த்த கரந்தை மறவர்கள் கூற்றுவனை ஒப்பச் சினந்து ஆனிரைகளைக் கவர்ந்து செல்லும் வெட்சி மறவர் சென்ற வழியைப் பின்பற்றிச் செல்லுதல்.

***அமரர் கண் முடியும் அறுவகை :*** (தொல்—புற—21 பாடாண்டிணை) வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி ஆகிய ஆறு திணைகளின் போர் நிகழ்த்திய வீரர்களுடன் பாடாண் பகுதிக்குரிய வகையில் வெற்றிச் சிறப்பெய்திய அவ் அறுவகை வீரர்கள் பால் நிறைவுறும் பாடாண் பகுதி அமர்=போர்—அமரர் = போர் மறவர். இதற்கு அமரர் தேவர் என்றும் அவர் கண்ணே ஒத்து முடிபவனாகிய முனிவர், பார்ப்பார், ஆனிரை, மழை முடியுடைய வேந்தர், உலகு என்னும் ஆறுவகை என்றும் நச்சினார்க்கினியர் பொருள் கூறுவார். அவ்வுரையின் பொருத்த மின்மையை தொல்காப்பிய ஆராய்ச்சி உரையுள் கண்டு கொள்க.

***அரச உழிஞை*** (உழி — பு— வெ) பகைவரின் அரசரை முற்றும் உழிஞை வேந்தனது

செயலும் பண்புமாகிய வீறுகளை விளம்புவது.

***அரச முல்லை :*** (வாகை–பு–வெ) பெரும் பகையையும் தன் ஆற்றலால் வென்று வருந்தச் செய்யும் வேந்தனது இயல்பினைக் கூறுதல்.

***அரச வாகை :*** (வாகை –பு–வெ) பகைவரை வெல்லுதற்குரிய ஆற்றலும் பண்பும் உடையான் என அம்மன்னவனது இயல்பைக் கூறல்.

***அரும்பகை தாங்கும் ஆற்றல்*** (தொல்–புற–17 – வாகைத்திணை) வெல்லுதற்கு அருமைப்பாடுடைய தொரு படையைத் தடுத்து வெல்லும் அருஞ்செயல்.

***அருளொடு நீங்கல்*** (வாகை–பு–வெ) உலகத்து உயிர்கள் (மக்கள்) பல்லாற்றானும் எய்தும் நலிவினை எண்ணிச் சான்றோர் இவ்வுலகப் பற்றினை விட்டு அருள் நிலை எய்துதல் உறுதி பயக்கும் எனல்.

***அருளொடு புணர்ந்த அகற்சி*** (தொல்–பு–17 வாகைத்திணை) மன்பதையிடத்துக் கைம்மாறு கருதாமற் புரியும் பரிவும் இரக்கமும் அன்பும் ஈகமும் முதலாய அருள் உணர்வு நிறைந்து புரியும் செயல்களான் விளங்கும் வெற்றி நிலை.

***அவிப் பலி***(வாகை–பு–வெ) தன்னைப் புரந்து வரும் அரசனுக்குச் செஞ்சோற்றுக் கடன்பட்டுள்ளேன் என ஒரு மறவன் அரசனுக்கு வெற்றி வாய்க்க வேண்டுமென்று தன்னை வெற்றித் தெய்வத்திற்குப் பலியாகக் கொடுப்பது. ஆவிப்பலி என்பது அவிப்பலி என ஆக்கம் பெற்றது என்பார் உரையாசிரியர். ஆருயிர் என்னும் அவிவேட்டார் என நூலாசிரியர் கூறுதலான் அவி–வேள்வியிற் கொடுக்கும் பலி என்பது அவர்க்கருத்தெனத் தெரிகிறது.

***அவையமுல்லை :*** (வாகை –பு–வெ) அறங்கூரவையின் கண் நடுவராயமர்ந்து வழக்கினை ஆராய்ந்து நடுவுநிலை பிறழாமற் கூறும் அவை நடுவரின் வெற்றியைக் கூறுவது.

***அழிபடைதாங்கல்*** (நொச்–பு–வெ) தமது படைவீரர்களின் சூழ்ச்சி கண்டு சினந்து இகல் பெருக. அப்படையினரைக் கொண்டே பகைவரைத்தடிந்து அரணைக் காத்தது.

***அறிவன் தேயம்*** (தொல்–புற–16) வாகைத்திணை) மறுவில் செய்தி மூவகைக்காலமும் நெறியின் ஆற்றிய அறிவன் தேயம். குறைவற்ற செயற்பாடுடைய நாள் (நட்சத்திரம்) கோள் (கிரகம்) ஞாலம் (உலகம்) ஆகிய மூன்றானும் நிகழும் மூவகைக் காலங்களையும் நூலானும் நுண்ணறிவானும் அறிந்து செயலாற்றிய அறிவன் வாகை. செயலாற்றுதலாவது நாள் முதலியவற்றின் இயக்கங்களைக் கணித்தறிந்து உலகிற்கு நன்மை பெருகவும் தீமை அருகவும் மந்திரங்களானும் வேள்விகளானும் புரியும் வெற்றிகளாம்.

***அறிவன் வாகை*** (வாகை– பு–வெ) அரசனது வெற்றிப் புகழ் நிலைபெற முக்காலங்களையும் நன்குணர்ந்து தப்பாத வாய்மொழிகூறும் அறிவரது வாகையைக் கூறுவது.

***அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கம்*** (தொல்–புற–16) வாகைத்திணை) ஓதல், ஓதுவித்தல், தூதுபோதல், தேவர் கோட்டம் முதலாயவற்றைப் பேணுதல், துணைவயிற் சேறல், ஓதுவித்தலான் பொருள் செய்தலாகிய அறுவகையினும் செயலாற்றும் அந்தணர்ப்பகுதியினர் தம் செயலாற் பெறும் வாகை. நச்சினார்க்கினியர் வேத மரபினை மேற்கொண்டு விரித்துரைப்பார்.

***அனை நிலை வகை*** (தொல்–புற–16–வாகைத்திணை) பார்ப்பனப்பக்கம் முதலாகக் கூறப் பெற்ற ஆறுபகுதியும் நிலைக்களமாக அவற்றுக் கண்தோன்றிய வேறுபட்ட கூறு பாட்டோடு வரும் வாகை என்பார் நச்சினார்க்கினியர் அத்தொடர் மனைநிலைவாகை என அமைதல் வேண்டும். அஃதாவது, மனைக்கிழமை பூண்டொழுகும் முதுகுடிமகளிரின் திறல் மிகுவாகைப்பகுதிகள் என்பது பொருள் அவையாவன, மூதின் முல்லை, இல்லாள் முல்லை, நாண் முல்லை முதலியவாம்.

***ஆகோள்*** (தொல்–புற–3. வெட்சித்திணை) எதிர்த்த கரந்தை மறவரை வீழ்த்தியபின் தொழுவின் கண் நிறைந்த ஆனிரைகளை வெட்சி மறவர் அகப்படுத்திக்கொள்ளுதல். (வெட்–பு–வெ) பகைவர் முனையிடத்தே அவரைக் கடந்து ஆரவாரித்து வெட்சி மறவர் கன்றுகளொடு பசுநிரைகளைக் கைக் கொண்டது.

***ஆஞ்சிக் காஞ்சி :*** (தொல்–புற–19. காஞ்சித்திணை) நீத்த கணவனைத் தீர்த்த வேலினானே தன்னுயிரை உடம்பினின்றும் பெயர்த்த மனைவியைக் கண்டோர் அஞ்சிய நிலை அஞ்சிய காஞ்சி – ஆஞ்சிக் காஞ்சி என ஆக்கமுற்றது. (காஞ்–பு–வெ) (1) காதற் கணவனொடு செறிந்த நெருப்பிலே மூழ்கி மடியும் காதலியின் கற்புச் சிறப்பினைக் கூறுவது (2) தலைவன் மடிந்ததற்குரிய வேலினால் தானும் மடிந்ததலைவியின் நிலைமையைக் கூறுவது என இருதிறனாகக் கூறுவார் ஐயனாரிதனார்.

***ஆடல் வென்றி :*** - (ஒழிபு–பு–வெ) பண்ணிசைக்கும் தானத்திற்கும் ஏற்ப மெய்ப்பாடு காட்டி வேந்தன் காணுமாறு ஆடல் மகள் ஆடும் துடிக் கூத்து. அது வாகைத்திணைக்குரிய ஒரியல்பாகும்.

***ஆண்பாற் கிளவி :*** (இரு–பெருந்–வெ) இருபாற் பெருந்திணைக்குரிய துறைகளுள் ஒன்று. விருப்பமிக்க காம வேட்கை எல்லை கடத்தலான் ஏக்கமுற்று மயங்கி நிற்கும் தலைவன் தலைவியிடம் கூறும் கூற்று.

***ஆதந்தோம்பல் :*** (தொல்–புற–2–வெட்சித்திணை) பகைப் புலத்தாரது ஆனிரைகளை களவினாற் கொணரச் செய்து அவற்றைப் பேணிக் காத்தல்.

***ஆபெயர்த்துத் தருதல் :*** (தொல்–புற–5–ஒழிபு) வெட்சி மறவர் கவர்ந்த ஆனிரைகளை வேற்றுப்புல மறவர் (கரந்தையார்) மீட்டுத் தருதல்.

***ஆர்*** (தொல்–புற—5–பொது–பு–வெ) போர் மறவர் சூடும் ஆத்திப்பூ. இது சோழ வேந்தர்க்குரிய அடையாளப்பூ. விறற்படை மறவர் வெஞ்சமங்காணின் மறப்போர்ச் செம்பியன் மலைபூ உரைத்தது என்பார் ஐயனாரிதனார்.

***ஆரமர் ஒட்டல் :*** (தொல்–புற–5) ஒழிபு போர்மேற் செல்லும் வெட்சி மறவரை போரெதிர்த்து மறவர் பின்னிடச் செய்தல். அமர் என்பது ஆகுபெயரான் போர் மறவரை உணர்த்தி நின்றது.

***ஆரெயில் உழிஞை :*** (உழி–பு–வெ) பகைவருடைய நெடியமதிலரணின் சிறப்பையும் திண்மையையும் எடுத்துரைப்பது.

***ஆள்வினை வேள்வி :*** (பாடாண்–பு–வெ) போர் மேற் சென்று வினை முற்றி வந்த மாவீரன் மனை வேள்வியாகிய விருந்தோம்பலைக் கூறுவது.

***ஆளெறிபிள்ளை :*** (கரந்–பு–வெ) தன் மேல்வரும் பகைவரை விலக்கி ஒரு தனியனாக நின்று பகைவீரரை வெட்டிவீழ்த்துவது பிள்ளை–விளைவு கருதாத பிள்ளைத் தன்மையுடையோன்.

***ஆனந்தப் பையுள்*** (சிற–பொது–பு–வெ) கணவன் இறந்தமை கண்டு உளமெலிந்த தலைவி மிக்க இடும்பையினால் வருந்துவது.

***ஆனந்தம் :*** சிற–பொது–பு–வெ) (1) தலைவன் விழுப்புண்பட்டானாக நிகழும் சகுனங்களும் வாய்ப்புள் எனப்படும் விரிச்சியும் மாறுபடுவது கண்டு தலைவி அஞ்சி நடுங்குவது. (2) தலைவன் போர் மேற் சென்றானாக நிகழும் ஒவ்வாத சகுனமும் விரிச்சியும் கண்டு தலைவி கலங்குவதும் அத்துறையாகும்.

***இகல் மதிற் குடுமிகொண்ட மண்ணு மங்கலம் :*** தொல்–புற–11 உழிஞை) அரணத்தின் அகத்தே புக்கவேந்தன் மதிலகத்துப் பகை வேந்தனது கோயில் முடியினைக் கைக் கொண்ட வெற்றியான் அதன்கண் அமர்ந்து நீராடுதலாகிய மங்கலம்–மண்ணுதல் = நீராடுதல், மங்கலம்=சிறப்பு.

***இயங்கு படையரவம்*** (தொல்–புற–7–வஞ்சித்திணை) நால்வகைப் படையினரும் எழுச்சியுற்றுப் பகைவரின் மிகையினை அழிக்கச்செல்லும் அவரது ஆர்ப்பரவம்.

***இயன் மொழி வாழ்த்து*** (தொல்–புற–29. பாடாண்திணை) பரவலும் புகழுமாகப் பாடுதற்குரியாரை அணுகிச் சென்று அவர்தம் பெருமையை வாழ்த்துதல். (பாடாண்–பு–வெ) (1) இன்னோர் இன்னவை கொடுத்தார் நீயும் அன்னோர் போல அவை எமக்கு

ஈக என என்னோருமறிய எடுத்துரைத்தல் (2) மயக்கமற்ற கீர்த்தியை உடைய மன்னவன் பண்பு முலியவற்றைப் போற்றிப் புகழ்ந்து கூறுதலும் இயன் மொழி வாழ்த்தாகும்.

***இல்லவை நகுதல் :*** (பெருந்–பு–வெ) பரத்தைமையை மறைத்த தலைவனை நோக்கித் தலைவி உண்மையல்லாதவற்றைக் கூறித் தானும் புலவிதணிந்தாளாகக் கூறி நகைத்தலைச் செய்வது.

***இல்லாண் முல்லை :*** (முல்–பொது–பு–வெ) தனது காதற் கணவனை வாழ்த்திப் பலரும் இசைக்கும் இனிய புகழைக் கூறும் இல்லாளது சிறப்பினை எடுத்துரைப்பது.

***இரவு நீடு பருவரல் :*** (கைக்–பு–வெ) மனையிடத்துத் தனித்திருந்து வருந்தும் தலைவி இரவின்கண் கலங்கும் நிலையைச் சொல்லுவது.

***இரவுத் தலை சேறல் :*** (பெருந்–பு–வெ) தலைவனைக் காணும் விருப்பினால் செறிந்த இருளின் கண் தன் இல்லத்தை நீங்கிச் செல்லுதல்.

***இருநிலந் தீண்டா அருநிலை :*** (தொல்–புற–13. தும்பைத்திணை) தும்பைப் போரில் எதிராளியால் வெட்டுண்ட வீரர்களின் குறையுடம்பும் உறுப்புக்களும் நிலத்தைத் தீண்டிக்கிடவாமல் எழுந்தெழுந்து துள்ளும் நிலை. அருநிலை என்பதற்கு நீருள் கிடக்கும் அட்டை என்றும் அட்டை இரு கூறாக வெட்டுண்ட வழி அவை தனித்தனி இயங்குமாறு வெட்டுண்ட தலையும் உடம்பும் எழுந்து துள்ளுதல் என்பார் இளம்பூரணார் இதனை அட்டையாடல் என்பார் இடைக்கால உரையானர். அது பொருந்தாதென்பதை தொல்காப்பிய ஆராய்ச்சிக் காண்டிகையுள் கண்டு கொள்க.

***இருபாற் பெருந்திணை*** (புற–வெ) பெருந்திணைப் படலத்தின் ஒருபிரிவு இஃது பதினேழு துறைகளையுடையது.

***இரு மூன்று மரபின் ஏனோர் பக்கம் :*** (தொல்–புற–16 வாகைத்திணை) ஆகமம் முதலாய கலைகளை ஓதலும் தூது போதலும், துணை வயிற் சேறலும் காவல் மேற் கோடலும் வாணிகம் முதலியவற்றாற் பொருளீட்டலும் உழுதுபயன் விளைத்தலும் ஆகிய அறுவகைப் பட்டவினைகளின் கண் அந்தணரும் அரசரும் அல்லாதராகிய வணிகரும் வேளாளருமாகிய ஏனோர் தத்தங் கூற்றைப் பாகுபடமிகுந்தலான் எய்தும் வாகைப் பகுதிகள் – மற்றும் பொதுப்பட ஏனோர் என்ற தனான் ஏனைய சிற்றரசர், குறுநில மன்னர் அமைச்சர் தானைத்தலைவர், நல்லிசைப் புலவோர் பாணர் முதலாய கலைஞர் – பிறகலை வல்லுநர் தம் வாகையும் கொள்க.

***இரு மூன்று மரபின் கல்*** (தொல்–புற–5) போரிற் பட்ட மாவீரனுக்கு எழுப்பப் பெறும் கல்பற்றிய நிகழ்ச்சி ஆறு வகைப்படும். அவையாவன காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுதல், பெரும்படை வாழ்த்தல் என்பனவாகும். இவற்றின் விளக்கங்களை அவ்வத் தலைப்புக்களிற் கண்டு கொள்க.

***இருவர் தலைவர் தபுதிப்பக்கம்*** (தொல்—புற—14 தும்பைத்திணை) இருபெரும் வேந்தர்தம் தானைத் தலைவர்கள் தம்முள் மைந்து பொருளாகப் பொருதழிந்த தும்பையின் துறை.

***இருவரும் தபுநிலை :*** (தும்பை—பு—வெ) தத்தம் படைகள் களத்திலே மடிந்தாராக இருபெரும் வேந்தர்கள் தாமும் தம்முள் பொருது பட்ட நிலை.

***இற்கொண்டு புகுதல் :*** (பொது—பு—வெ) இருபெரு வேந்தர் நிகழ்த்திய போரிடத்துப் பொருது மறைந்தவனுக்குக் கல் நிறுவி அக்கல்லைப் பரவிக் கோயிலிடத்துக் கொண்டு புகுந்தது.

***இன்னனென் றிரங்கிய மன்னை*** (தொல்—புற—19. காஞ்சித்திணை) போரில் இறந்தபட்ட வீரன் இன்ன இன்ன தன்மை யாளன் என ஏனையோர் கலங்கிக் கூறும் மன்னைக் காஞ்சி என்னும் துறை..

***உட்கோள் :*** (கைக்—பு—வெ) காட்சியிற்கண்டு ஐயுற்று நிற்கும் தலைவன் அத்தலைவியின் உட்கருத்தினைக் குறிப்பினால் அறிந்து கொள்ளுதல் அகப்பொருள் நூலோர் இதனைக் குறிப்பறிதல் என்பர். தலைவி தலைவனது கூட்டத்தை நினைந்துட் கொள்ளலுமாம்— இது பெண்பாற் கூற்று.

***உட்கு வரத்தோன்றல் :*** (தொல்—புற—1. வெட்சித்திணை) அச்சந் தோன்ற நிகழுதல் — வெட்சித்திணையின் துறைகளுக்குரிய தன்மையாகும்.

***உண்டாட்டு :*** (தொல்—புற—3. வெட்சித்திணை) வெற்றியும் வேந்தனது வரிசையும் பெற்ற வெட்சி மறவர்கள் உண்டு களித்தாடும் துறை (வெட்—பு—வெ) வெட்சி மறவர் மதுவை உண்டு களித்தல்.

***உரை கேட்டு நயத்தல் :*** (பெருந்—பு—வெ) துன்பத் தோடு இல்லத்தில் தங்கியிருக்கும் தலைவியின் காதலுரை கேட்டு அவளை விரும்புதல்.

***உவகைக் கலுழ்ச்சி:*** (தும்பை—பு—வெ) போரில் வாளால் விழுப்புண் பட்டுக்கிடக்கும் வீரனது மனைவி அவன் உடம்பினைக் கண்டு உவக்கைக் கண்ணீர் அரும்புதல்.

***உழபுல வஞ்சி :*** (வஞ்சி—பு—வெ) பகைவருடைய நாட்டினைப் பெருநெருப்பிட்டுக் கொளுத்தும் துறை.

***உழவன் வென்றி*** (ஒழிபு—பு—வெ) மண்ணைப் பண்படுத்தி ஏருழுது விதை விதைத்து எண்வகைக் கூலங்களையும் விளைவிக்கும் உழவனது வெற்றி நிலை கூறும் துறை.

***உழிஞைத்திணை :*** (தொல்—பு—8) மண்ணாசையால் வஞ்சி சூடிப்படையெடுத்து வந்த வேந்தனோடு நின்று போரிடாமல் தனது அரணகத்து மறைந்திருந்து போரிடக்

கருதியவரின் மேல் படையெடுத்து வந்தவன் உழிஞை சூடி அம்மதிலை முற்றுகையிட்டு புறமதிலையும் பற்றப் போர் புரிதல் உழிஞைத்திணை (பு–வெ) உழிஞை மலரைச் சூடிப் பகைவரின் கொடி அசையும் முழுமுதல் அரணத்தைக் கொள்ளக் கருதிப் போரிடுதல்.

## உழிஞைத்திணை : தொல் -புற:

"முழுமுதல் அரணம் முற்றலம் கோடலும்
அனைநெறி மரபிற் றாகும் என்ப."

"அது வேதானும் இருநரல் வகைத்தே"

"கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும்
உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்
தொல்லெயிற் கிவர்தலும் தோலின் பெருக்கமும்
அகத்தோன் செல்வமும் அன்றி முரணிய
புறத்தோன் அணங்கிய பக்கமும் திறப்பட
ஒருதான் மண்டிய குறுமையும், உடன்றோர்
வருபகை பேணார் ஆரெயில் உளப்படச்
சொல்லப்பட்ட நாலிரு வகைத் தே"

"குடையும் வாளும் நாள்கோ ளன்றி
மடையமை ஏணிமிசை மயக்கமும் கடைஇ
சுற்றமர் ஒழிய வென்று கைக் கொண்டு
முற்றிய முதிர்வும் அன்றி முற்றிய
அகத்தோன் வீழ்ந்த நொச்சியும் மற்றதன்
புறத்தோன் வீழ்ந்த புதுமை யானும்
நீர்ச்செரு வீழ்ந்த பாசியும் அதாஅன்று
ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும்
மதில் மிசைக் கிவர்ந்த மேலோர் பக்கமும்
இகல் மதிற் குடுமிகொண்ட மண்ணுமங்கலமும்
வென்ற வாளின் மண்ணொடு ஒன்றத்
தொகை நிலை என்னும் துறையொடு தொகைஇ
வகை நான் மூன்றே துறை என மொழிப"

## பு.வெ.

உழிஞை ஓங்கிய குடைநாட் கோளே
வாணாட் கோளே முரச உழிஞை
கொற்ற வுழிஞையொடு அரச உழிஞை

கந்தழி என்றா முற்றுழி ஞையே
காந்தள் புறத்திறை ஆரெயில் உழிஞை
அருந்தோ லுழிஞை குற்றுழி ஞையொடு
கோட்புறத் துழிஞை பாசி நிலையே
ஏணி நிலையே இலங்கெயிற் பாசி
முதுவுழிஞையே முந்தகத் துழிஞை
முற்று முதிர்வே யானைகைக் கோளே
வேற்றுப்படை வரவே உழுதுவித் திடுதல்
வாண் மண்ணுநிலையே மண்ணும் மங்கலமே
மகட்பா லிகலே திரைகொண்டு பெயர்தல்
அடிப்பட இருத்தல் தொகைநிலை உளப்பட
விழுமென் கீர்த்தி இருபத் தொன்பதும்
உழிஞை என்பனார் உணர்ந்திசி னோரே.

***உழிஞைத்திணைக்குரிய முதல்,கரு,உரிப்பொருள் :*** இது மருதத்திணையின் புற ஒக்கமாதலின் மருதத்திற்குரிய முதற்பொருளும் கருப்பொருளும் பொருந்து மாற்றான் உரியவாகும். உரிப்பொருள் பகைவர்தம் அரணத்தை முற்றுகையிட்டுக் கொள்ளப் போரிடுதல்.

***உழிஞைத்திணை மருதத்திணைக்குப் புறனாயவாறு :*** முழு முதலரணத்தை முற்றலும் கோடலுமாகிய உழிஞை ஒழுக்கம் நிகழ்தற்குரிய அரண் பெரும்பான்மையும் தீம்புனலுலகத்ததரகலானும் போர்ச் செயலுக்கு விடியலாகிய சிறுபொழுது சிறத்தாலானும் பெரும்பொழுது வரையறையின்மையானும் பரத்தமை ஒழுகலாறு போல நிலம் பொதுவெனப் பொறாது போரிடலானும் நிறை முதலிய பொருள் வேட்கை காரணமாகவும் பகைவன் அஞ்சியடைந்திருக்கும் மதிலைச் சென்று முற்றுதலானும் மதிலகத்துள்ளோர் நிலை கருதி நல்லிசைப் புலவோர் இடித்துரைத்தாலானும் மதிலை முற்றுவோன் பாடியின் கண் உறையுங்கால் புறத்தோரைக் கூடும் வாய்ப்புண்மையானும் தலைவி ஊடற்குக் காரணமாக அமைதலின் உழிஞை மருதத்திற்குப் புறனாயிற்று.

***உழுது வித்திடுதல் :*** (உழிஞை–பு–வெ) பகைவர் மதிலைமுற்றி வென்றழித்தபின் கழுதையேர் பூட்டி உழுது கவடியையும் குடைவேலையும் விதைத்துப் பாழ் செய்தல்.

***உள்ளிய துமுடிக்கும் வேந்தனது சிறப்பு :*** (தொல்–பு–10 உழிஞை) எண்ணியதை எண்ணியாங்கு முடிக்கும் உழிஞை வேந்தன் சிறப்பினைப் பாராட்டிக் கூறுதல்.

***உன்னநிலை*** (தொல்–புற–5) இதனை ஒடா உடல் வேந்தடுக்கிய உன்ன நிலை என்பார் தொல்காப்பியர். பின்னிடாது போரிடும் உழிஞை வேந்தன் நிமித்தமாக

அடுக்கிக் கூறக் கருதியநிலை. உன்னுதல்=நல்ல சகுனத்தை நினைத்தல் (பொது–பு–வெ) நெருங்குதற்கரியனாய் கழல் புனைந்த மன்னனை நிமித்தம் பார்க்கும் மரத்தோடு கூட்டி அவனது மிக்க புகழைச் சொல்வது.

***ஊடலுள் நெகிழ்தல் :*** (பெருந்–பு–வெ) தலைவன் புறத்தொழுக்கத்தை எண்ணி இரவில் துன்பம் மிகுதலான் ஊடல் கொண்டு உள்ளம் குழைதலாகிய தலைவியது நிலையைக் கூறுதல்.

***ஊர்கொலை :*** (தொல்–பு–3. வெட்சி) ஆனிரைகளைக் கவரச் சென்ற வெட்சி மறவர் தொழுவங்களைக் காவல் புரிவோர் எதிர்த்தவழி அவரைக் கொன்றொழித்தல் (வெட்சி–பு–வெ) குதிரையிற் சென்ற வெட்சி மறவர் கரந்தையாரின் காவல் அரணத்தை அழித்தல்.

***ஊர்ச் செரு :*** (நொச்சி–பு–வெ) உழிஞை மறவராற் புகுதற்கரிய காவற் காடும் அகழியும் சிதையாதபடிக் காத்து நிகழ்த்தும் போர்.

***ஊரின் கண் தோன்றிய காமப்பகுதி :*** (பாடாண்–பு–வெ) நீங்காத காதலையுடைய மைந்தரும் மகளிரும் அழகு பொருந்தக் கூடி மகிழும் ஊரின் பெருமையைக் கூறுதல்.

***ஊரோடு தோற்றமும் உரித்து :*** (தொல்–பு–25–பாடாண்டிணை) கடவுள் மாட்டு நிகழும் பாடாண் பகுதியில் அக்கடவுளரை மரபு பற்றி வழங்கி வரும் அவர் உறையும் ஊர்களோடு கூட்டிக் கூறி அவர் பெருமையைத் தோற்றுவிக்கும் தோற்றமும் உரித்து. ஊரோடு தோற்றம் என்பதற்குப் பேதை முதலாகப் பேரிளம் பெண் ஈறாகக் காணும் முறையில் கடவுளர் உலாவருதல் என்பதைக் கருத்தாகக் கூறுவார் இளம்பூரணர். ஊரில் பொதுமகளிரோடு கூடிவந்த விளக்கம் என்றும் தோற்றம் என்றது அக்காமம் தேவரிடத்தும் மக்களிடத்தும் விளங்கும் விளக்கம் என்றும் அது உலாச் செய்யுளாகப் பின்னுள்ளோர் கூறுவது என்றும் நச்சினார்க்கினியர் கூறுவார்.

***எஞ்சா மண்ணசை வேந்தன் :*** (தொல்–புற–6 வஞ்சித்திணை) மாற்றவர் மண்ணைக் கொள்வதிற் குறையாத விருப்பமுடைய வேந்தன்.

***எட்டுவகை நுதலிய அவையம் :*** (தொல்–புற–17–வாகைத்திணை) அறங்கூரவையத்தார் முதலாய எண்வகை அவையத்தார்குரிய எண்வகைக் குணம் அவையாவன, இலங்குநூற்கல்வி, விழுப்பந்தரும் ஒழுக்கம் வாய்மை, நடுவு நிலைமை, வெஃகாமை, அழுக்காறின்மை, வெகுளாமை அருளுடைமை என்பனவாம்.

***எயிற்பாசி :*** (உழிஞை–பு–வெ) மிக்க சினமுடைய உழிஞை மறவர் காவன் மதிலின் வலிமைகெட ஏணிமேல் ஏறியது.

***எயிற் போர் :*** (நொச்–பு–வெ) கூரிய போர்க் கருவிகளான் மதிலினைக் காக்கும் நொச்சி மறவர் போர் நிலையைக் கூறுதல்.

***எரிபரந்தெடுத்தல் :*** (தொல் –புற–7.வஞ்சித்திணை) பகைவரது மண்ணாசையழியுமாறு அவனது புற நாட்டை வஞ்சி மறவர் எரியூட்டுதல்.

***எருமை மறம் :*** (தொல்–பு–வெ) வியர்வை தோன்றப் பெருஞ்சினம் கொண்டு தன் படை மறவர் முதுகிட்டவழி பின்னின்று பகைவரை எதிர்த்தல்.

***ஏணிநிலை :*** (உழிஞை–பு–வெ) உழிஞை மறவர் மதிலைக் கைக்கொள்ளும் பொருட்டு மேலேறிப் போரிட மதிலில் ஏணிகளைச் சார்த்துதல்.

***ஏணிமிசை மயக்கம் :*** (தொல்–புற–11–உழிஞை) புறமதிலின் கண் மடுத்தலமைந்த ஏணிகளினிடமாக நின்று இருதிறத்தாரும் கலந்து புரியும் போர்.

***ஏம எருமை :*** (தும்பை–புற–வெ) இருதிறத்துப் படைகளும் தம்மில் தலை மயங்கிய வாட் போரில் தான் எறிந்த வேல் பொருகளிற்றின் மத்தகத்திற்குளிப்ப அம்மறவன் தோள் வென்றி கொண்டது.

***ஏமச்சுற்றம் :*** (தொல்–புற–17 வகை) உழவுத் தொழிலின் விளைந்த கூலங்களை இரவலர்க்கு வரிசையறிந்து வழங்குதல் இதனை ஏர்க்களவழி என்றும் கூறுவர்.

***ஏழக நிலை :*** (பொது–பு–வெ) (1) ஒரு மறவன் ஆட்டுக் கிடாவினை ஊர்ந்து செல்லினும் அவன் மாவீரன் என்று அவன் தகுதியைப் புகழ்வது (2) தனது இளமை கருதாமல் அரசன் பூமிகாவல் பூண்டு நிற்றலும் ஏழகநிலை எனப்படும்.

***ஏறாண் முல்லை :*** (வாகை–பு–வெ) மாறின்றிச் சினந்து போரிடும் ஆண்மைத்தன்மையுடைய குடியொழுக்கத்தினை உயர்த்துக் கூறுவது.

***ஏறுகொள்வென்றி :*** (ஒழிபு–பு–வெ) ஆனேறுகள் ஒன்றோடொன்று போரிட்டு வெற்றி கொள்வது.

***ஐயம்*** (கைக்–பு–வெ) ஒருவன் காட்சியிற் காணும் ஒருத்தியை அரமகளோ சுரமகளோ மானிடமகளோ என ஐயமுறுவது.

***ஐவகைமரபின் அரசர்பக்கம் :*** (தொல்–புற–16 வாகை) அரசியல், நீதிநூல், படைக்கலப் பயிற்சி ஆகிய கல்வியை ஓதி உணர்தலும் தூதுபோதலும், காவல் புரிதலும், குடிபுரந்தோம்பலும் பகைவயிற் சேறலும் துணைவயிற் சேறலுமாகிய ஐவகைப் பகுதிக் குரிய அரசர் அப்பகுதிகளை எய்தும் வெற்றியும் சிறப்புமாகிய வாகை.

ஓதலும் வேட்டலும் ஈதலும் படை வழங்கலும் குடியோம்புதலுமாகிய பக்கம் என்பார் இளம்பூரணார். வேட்டல், ஈதல், காத்தல், தண்டஞ் செய்தல் என்பார் நச்சினார்க்கினியர்.

***ஒரு தனிநிலை :*** (வஞ்சி–பு–வெ) போர்க்களத்தில் பகைவரது படை வெள்ளம் தன்னைச் சாய்த்துவிடாமல் கல்லாற் கட்டின அணைபோல ஒருவீரன் அப்பெரும் படையைத் தடுத்து நிறுத்தி நிற்கும் நிலை.

***ஒருவரும் ஒழியாத்தொகை நிலை :*** (தொல்–புற–14 தும்பை) வாள் வாய்த்து இருபெரு வேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியாத் தொகை நிலை என்பார் தொல்காப்பியர். இருதிறத்துப் படைகளும் எஞ்சாமல் மாய்ந்து ஒழிந்த நிலை தொகுதல்=மறைதல்–அழிந்தொழிதல்.

***ஒருவன் மண்டிய நல்லிசை நிலை :*** (தொல்–புற–14தும்பை) செருவகத்து இறைவன் வீழ்ந்தெனச் சினைஇ ஒருவன் மண்டிய நல்லிசை : தன் தலைவன் வீழ்ந்துபட்டதைப் பொறாத ஒரு மறவன் அதற்குக் காரணமானோரை அழித்தற்குச் சினந்து நெருங்கிப் பொருத புகழுக்குரிய நிலை.

***ஒல்லாரிட வயிற் புல்லிய பாங்கு :*** (தொல்–பு–17 வாகை) பகையாயினாரிடத்தே அவர்தம் பகையை நீக்கி அவரைத் தழுவிக் கொள்ளும் பாங்காகிய வாகை.

***ஒள்வாளமலை :*** (தும்பை–பு–வெ) மிக்க தோள் வலியுடைய வாள் மறவர் ஆர்க்கும் வீரக்கழலணிந்த அரசனுடன் சேர்ந்து ஆடியது.

***ஒள்வாள் வீசிய நூழில் :*** (தொல்–புற–14 தும்பை) பல்படை ஒருவற்குடைதலின் மற்றவன் ஒள்வாள் வீசியநூழில் என்பார் ஆசிரியர். பல்கி நின்ற மாற்றாரது படை அதன்மேற் சினந்து மண்டிய ஒரு மறவனுக்கு ஆற்றாமல் சிதைதலின் அவனைத் தன் ஒள்ளிய வாளால் வீசிக் கொன்று குவித்தல்.

***ஒழிபு*** (பு–வெ) பாடாண்டிணைக்கும் வாகைத்திணைக்குமுரிய வாகி ஆங்குக் கூறாமல் ஒழிந்த துறைகளை ஒழிபு என்னும் தலைப்பின் கீழ் ஐயனாரிதனார் நூலிறுதியிற் கூறுகின்றார். அது பதினெட்டுத் துறைகளையுடையது. இவை கொளு என்னும் இலக்கணச் சூத்திரமின்றி விளக்கந் தரும் வெண்பாக்களால் மட்டும் அமைந்துள்ளன. அவற்றை அட்டவணையிலும் விளக்கத்தை அகரநிரலிலும் கண்டுகொள்க.

***ஒற்றின் ஆகிய வேய் :*** (தொல்–பு–3. வெட்சி) பகைவரது ஒற்றர்கள் அறியாதவாறு ஒற்றரால் உளவறிந்து கொள்ளுதல். (வேய்வுபார்த்தல்-என்பது வேவு பார்த்தல் என வழக்கில் சிதைவுற்றது ) வேய்=ஒற்று.

***ஓம்படை*** (பாடாண்–பு–வெ) இன்ன காரியத்தைச் செய்தல் சிறந்த தன்மையெனச் சான்றோர் கூறி வாழ்த்தல் – (ஓம்பல்=காத்தல்)

***கட்காஞ்சி :*** (காஞ்சி–பு–வெ) மன்னவன் தன் மறவர்களுக்கு மட்டு ஈந்து மகிழ்தல் மட்டு=கள்.

***கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை*** (தொல்–புற–17 வாகை) நூலோர்

கட்டுரைத் தமைந்த ஒழுக்கத்தின் கண் நின் றொழுகும் தன்மையால் வரும் வாகை கட்டமைத்தல்=கட்டுரை கண்ணுதல் = கருதி ஒழுகுதல்.

***கட்டில் நீத்த பால் :*** (தொல்—புற—17 வாகை) ஒரேதுவான் அரசாளும் உரிமையை மேற்கொள்ள விரும்பாமல் அறம் நோக்கி அதனைத் தவிர்த்தல் கட்டில் =அரியாசனம் — நீத்தல் = துறத்தல்.

***கடவுள் மாட்டுக் கடவுட் பெண்டிர் நயந்த பக்கம் :*** (பாடாண்—பு—வெ) இமையா நாட்டமுடைய தேவ மகளிர் ஆராத காதலால் தேவரை விரும்பிய பாடாண் பகுதி.

***கடவுள் மாட்டுமானிடப் பெண்டிர் நயந்த பக்கம் :*** (பாடாண்—பு—வெ) முக்கட் கடவுளாய பரமனின் முயக்கத்தை மானிடப் பெண்டிர் விரும்பிய பாடாண் பகுதி.

***கடவுள் வாழ்த்து :*** (பாடாண்—பு—வெ) முப்பெருங் கடவுளருள் ஒருவரை மன்னவன் புகழ்ந்து வாழ்த்துதல்.

***கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வரும்*** (தொல்—புற—27. பாடாண்டிணை கொடிநிலை தந்தழி வள்ளி என்னும் மூன்றும் கடவுள் வாழ்த்தொடு பொருந்தியனவாக வரும்.

***கடிமனை நீத்த பால்*** (தொல்—பு—17—வாகை) கட்டில் நீத்த பால் என்பதற்குரிய துறை இளம்பூரணர் உரையுள் கடிமனை நீத்த பால் என்று உள்ளது. அதற்கு அவர் பிறர்மனை நயவாமை எனப் பொருள் கூறியுள்ளார்.

***கடை நிலை*** (தொல்—புற—29 பாடாண்டிணை) இதனைக் காவலர்க் குரைத்த கடைநிலை என்பார் தொல்காப்பியர். புரவலர் தம் வாயிலைக் காவல் செய்து நிற்கும் காவலரிடத்துப் புரவலரது பண்புகளை ஏத்தித் தன் நிலையைக் கூறுதல். கடை=வாயிற்புறம்

***கண்டுகண் சிவத்தல் :*** (பெருந்—பு—வெ) பெருவரை மார்பனாகிய தலைவன் அணிந்துள்ள மாலையைக் கண்டு முனிந்து தலைவி வெகுள்வது.

***கண்டுகை சோர்தல் :*** (இரு,பெருந்—பு—வெ) தலைவியின் அன்பு கை கடப்பத் தோழி கண்டு கை சோர்தல்.

***கண்படை நிலை :*** (தொல்—புற—29 பாடாண்டிணை) புரவலன் இனிது துயிலேற்றலை விரும்பி அவனது பண்புகளை ஏத்திக் கூறுதல்.

(வாகை—பு—வெ) மண்கொண்ட மறவேந்தன் கண்துயிலுதலைச் சிறப்பித்தல்.

(பாடாண்—பு—வெ) நெடுந்தேர்த்தானை நிலம் புழுதியெழ நடக்கும் தேரையுடைய மன்னவன் கண் துயிலுதலைச் சிறப்பித்தல்.

***கணிவன் முல்லை :*** (வாகை–பு–வெ) எதனையும் நிச்சயித்தறியும் தொல்கேள்வி ஞானமுடைய கணிவனது கீர்த்தியைக் கூறுவது.

***கணையும் வேலும் துணையுற மொய்த்தல் :*** (தொல்–பறு–13 தும்பை) எதிர்ந்த மறவர் எய்யும் அம்புகளும் ஒச்சிய வேலும் இணைந்து வந்து செறிதல்.

***கந்தழி :*** (தொல்–புற–27 பாடாண்டிணை) இளம்பூரணர் புறப்பொருள் வெண்பா மாலையின் கருத்தினைக் கூறுவர் நச்சினார்க்கினியர்.ஒருபற்றுக்கோடின்றித் தானே நிற்கும் தத்துவங்கடந்த பொருள் என்பார். வானமாகிய விண்வெளி என்பது ஆராய்ச்சிக் காண்டிகையுரை. பிறவாறும் கூறுவர். (உழிஞை–பு–வெ) மாவுடைத்தார் மணிவண்ணனன் சோவுடைத்த மறம் கூறுவது. (பாடாண்–பு–வெ) சூழும் நேமியான் சோவெறிந்த வீழாச்சீர் விறல் மிகுத்தது. மாயவன் சோ என்னும் மதிலை அழித்தது. கந்து=பற்றுக்கோடு அஃதாவது அரண். அழி=அழித்தது.

***கபிலை கண்ணிய புண்ணிய நிலை :*** (பாடாண்–பு–வெ) தலைசிறந்த நான்மறை முற்றிய அந்தணர்க்கு வழங்கக் கருதிய பசுவின் கொடைபற்றிய நிலையைக் கூறுதல்.

***கபிலை கண்ணிய வேள்நிலை :*** (தொல்–புற–29 பாண்டிணை) வெற்றி கருதிப்புரியும் வேள்வியின் கண் பார்ப்பார்க்குப் பரிசாகப் பாற் பசுவை வழங்கக் கருதிய நிலையைக் கூறுதல்.

**புறத்திணை ஒழிபு (கரந்தை) தொல்-புற-5**

"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளும் உறுபகை
வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்
போந்தை வேம்பே ஆர்என வரூஉம்
மாவருந் தானையர் மலைந்த பூவும்
வாடா வள்ளி வயவர் ஏத்திய
ஓடாக் கழல்நிலை உளப்பட, ஓடா
உடல் வேந்தடுக்கிய உன்ன நிலையும்
மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்
ஆரமர் ஓட்டலும் ஆபெயர்த்துத் தருதலும்
சீர்சால் வேந்தன் சிறப்பெடுத்துரைத்தலும்
தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும்
அனைக்குரி மரபினது கரந்தை : அன்றியும்
வருதார் தாங்கல் வாள் வாய்த்துக் கவிழ்தல் என்று
இருவகைப்பட்ட பிள்ளை யாட்டும்
காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்

சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல் என்று
இரு மூன்று வகையிற் கல்லொடு புணரச்
சொல்லப்பட்ட எழுமூன்று துறைத்தே".

(பு-வெ)

கதமலி கரந்தை அரவம்
அதரிடைச் செலவே அரும்போர் மலைதல்
புண்ணொடு வருதல் போர்க்களத்தொழிதல்
ஆளெறி பிள்ளை பிள்ளைத் தெளிவே
பிள்ளையாட்டொடு கையறு நிலையே
நெடுமொழிகூறல் பிள்ளைப் பெயர்ச்சி
வேத்தியல் மலிபே மிகுகுடி நிலையென
அருங்கலை உணர்ந்தோர் அவைபதி நான்கும்
கரந்தையும் கரந்தைத் துறையும் என்ப. (சூ.2)

***கரந்தை :*** (தொல்-புற-5) ஆனிரைகளைக் கவரும் வெட்சி மறவரைத் தடுத்துப் போர் புரியும் மறவர் சூடும் அடையாளப்பூ. வெட்சியின் ஒரு கூறாகிய இதனை தனி ஒரு திணையாகக் கூறுவார். ஐயனாரிதனார். கரந்தைத்திணை பதினான்கு துறைகளையுடையது. ஆனிரை மீட்டலைக் கரந்தை என்பர்.

***கரந்தையரவம் :*** (கரந்-பு-வெ) பகைவர்தம் ஆனிரைகளை கவர்ந்தமை கேட்டுக் கரந்தை மறவர்கள் பிறவினைகளைக் கைவிட்டு ஆனிரைகளை மீட்க ஆரவாரத்துடன் குழுமி எழுதல்.

***கல் நடுதல் :*** (பொது-பு-வெ) பெருவீறு காட்டிப் போரிட்டு மறைந்த வீரனின் பெயர் பொறித்த வீரக்கல்லினை வழிபாட்டிற்குரியதாக நடுதல்.

***கல்நீர்ப்படுத்தல் :*** (பொது-பு-வெ) (1) மறைந்த வீரனின் பீடும் பெயரும் பொறித்தற்குரிய கல்லினை நீராட்டி வைத்தல் (2) கல்லை நிரல் செய்ய எண்ணி அமைத்தலும் அத்துறையாகும்.

***கல் முறைப்பழிச்சல் :*** (பொது-பு-வெ) கல்லினை நீராட்டி நட்டபின் அவ்வீரனின் புகழைப்பாடி வாழ்த்தலும் தொழுதலும்.

***கழல்நிலை :*** (தொல்-புற-வெ) வயவரேத்திய ஓடாக்கழல் நிலை என்பார் ஆசிரியர் மறவராற் புகழப்பட்ட புறக்கிடாத உணர்வைத் தரும் வீரக்கழலை அணிதல் (பொது-பு-வெ) மாறுபாட்டினைப் பெருக்கும் வீரர்கள் போரிடும் பூசற்களத்தில் கடுமுரணையுடைய வீரன் கழலணிந்ததைக் கூறுவது.

***கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமை :*** (தொல்-புற-19-காஞ்சி)

இளமைப்பருவம் கழிந்தோர் அதனை இப்பொழுது உடையார்க்குத்தாமே சான்றாக இளமை நிலையாது எனப்தைக் காட்டிய முதுகாஞ்சி என்னும் துறை. –முதுகாஞ்சி என்னும் துறை முதுமை என நின்றது – முதுகாஞ்சி என்னும் தலைப்புக் காண்க.

***களவழி வாழ்த்து :*** (பாடாண்–பு–வெ) சிவந்த களரியிடத்து வளமான செல்வத்தை வெண்டுறையாழ்ப்பாணர் மிகுத்துச் சொல்வது.

***களவு :*** (தொல்–புற–2–வெட்சி) மாற்றாரது ஆனிரைகளை அவரறியாமல் இரவின்கண் சென்று கவர்தலாகிய செயல்.

***களவேள்வி :*** (வாகை–பு–வெ) கொல்லும் வலியினையுடைய பேய் வயிறார உண்ண மிக்க வலிமையுடைய வீரன் களத்தில் வேள்வி செய்வது.

***களிற்றுடநிலை :*** (தும்பை–பு–வெ) போர்க்களத்தில் பகைவர் எறிந்த வேலால் வீழ்ந்த களிற்றுடன் வீரனும் வீழ்ந்த செயலைச் சொல்வது.

***களிறெறிந்து எதிர்ந்தோர் பாடு :*** (தொல்–புற–14. தும்பை) சினந்தெழுந்த போர்க் களிற்றினையும் மாற்று வேந்தன் ஊர்ந்து வரும் களிற்றினையும் வாளும் வேலும் கொண்டு எதிர்ந்து புரியும் மறச்செயலைக் கூறுதல்.

***கற்காண்டல் :*** (பொது–பு–வெ) பெருவெற்றியைத் தந்து பூசலில் மடிந்த மறவற்கு நெடுங்கானகத்துள் தேடி நடுதற்குரிய கல்லினைக் கைக் கொண்ட நிலையைக் கூறுவது.

***கற்பு முல்லை*** : (முல்லை–பொ–பு–வெ) (1) இல்லறக் கிழமை பூண்ட மடந்தை தன் கணவன் நன்மையைப் பெருகச் சொல்வது (2) தன்னைப் பொருந்திய கணவன்பிரிந்த வழி தனது நிறைகாவலைக் கூறினும் கற்பு முல்லையாம். (3) செல்வமிக்க கணவனுடைய மாளிகையைச் சேர்ந்து அவனது மிக்க செல்வத்தை மகிழ்ந்து வாழ்த்துதலும் கற்பு முல்லையாகும்.

***கனவினரற்றல்:*** (கைக்–பு–வெ) தலைவன் பிரிந்திருக்கும் நிலையில் அச்சந்தரும் இரவின்கண் கனவுகண்டு வாய்விட்டுப் புலம்பலைச் சொல்வது.காஞ்சிப் பொதுவியற்பால : (பு–வெ) நிலையாமையை உணர்த்தும் காஞுசியின் பகுதியாக வரும் முதுமொழிக் காஞ்சி முதலாய ஆறு துறைகளையுடைய பகுதி.

தொல்–புற :-

"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே"
"பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் றானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே"

மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்
கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்
புண்கிழித்து முடியும் மறத்தினானும்
ஏமச்சுற்றம் இன்றிப் புண்ணோற்
பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்

இன்னன் என்றிரங்கிய மன்னையானும்
இன்னது பிழைப்பின் இதுவாகியர் எனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானும்
இன்னகை மனைவி பேஎய்ப் புண்ணோற்
றுன்னுதல் கடிந்த தொடாக் காஞ்சியும்
நீத்த கணவற் றீர்த்த வேலின்
பேர்த்த மனைவி ஆஞ்சி யானும்
நிகர்த்து மேல்வந்த வேந்த னொடு முதுகுடி
மகட்பா டஞ்சிய மகட் பாலானும்
முகனும் முலையும் சேர்த்திக் கொணடோன்
தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ
ஈரைந் தாகும் என்ப பேரிசை,
மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம்
ஆய்ந்த பூசல் மயக்கத் தானும்
தாமே எய்திய தாங்கரும் பையுளும்
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதானந்த மும்
நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து
தனிமகள் புலம்பிய முதுபாலையும்
கழிந்தோர் தேஎத்துக் கழிபடர் உறீஇ
ஒழிந்தோர் புலம்பிய கையறுநிலையும்
காதலி இழந்த தபுதார நிலையும்
காதலன் இழந்த தாபத நிலையும்
நல்லோள் கணவனொடு நனியழல் புகீஇச்
சொல்லிடை யிட்ட பாலை நிலையும்
மாய்பெருஞ் சிறப்பின் புதல்வற் பயந்த
தாய்த பவரூஉம் தலைப்பெயல் நிலையும்
மலர்தலை யுலகத்து மரபுநன் கறியப்
பலர்செலச் செல்லாக் காடுவாழ்த்தொடு
நிறையருஞ் சிறப்பிற் றுறையிரண் டுடைத்தே"

பு-வெ

காஞ்சி காஞ்சி அதிர்வே தழிஞ்சி
பெரும்படை வழக்கொடு பெருங்காஞ் சிய்யே
வாள்செல வென்றா குடையது செலவே
வஞ்சினக் காஞ்சி பூக் கோள் நிலையே
புகழ்த்தலைக் காஞ்சி தலைமா ராயம்
தலையொடு முடிதல் மறப்பெயர்க் காஞ்சி

மாற்றரும் பேய்நிலை பேய்க் காஞ்சிய்யே
மன்னைக் காஞ்சி கட்காஞ் சிய்யே
ஆஞ்சிக் காஞ்சி மகட்பாற் காஞ்சி
முனைகடி முன்னிருப் புளப்படத் தொகைஇ
எண்ணிய வகையான் இருபத்திரண்டும்
கண்ணிய காஞ்சித், துறையென மொழிப.

***காஞ்சித்திணை :*** (தொல்–புற–18) அகத்திணையாகிய பெருந்திணைக்குரிய புறத்திணை இணையில்லாத சிறப்பினையுடைய காஞ்சித்திணையின் இலக்கணமாவது. பல்லாற்றானும் நிலைபேறில்லாத இவ்வுலகத்தின் பொருந்திய பொருள் முறைமையினைக் கூறுவதாகும். இது பெருங்காஞ்சி முதலாகக் காடு வாழ்த்து ஈறாக இருபது துறைகளை உடையது. (பு–வெ) மாற்றாரது நிலத்தைக் கைக் கொள்ளக் கருதிப் போர்க் கெழும் வஞ்சி வேந்தனையும் வீரர்களையும் தம்மண்ணைக் காத்தல் வேண்டி எதிரெழுந்து போரிடுவது வஞ்சி என்னும் புறத்திணை என்பார் ஐயனாரிதனார். வட்கார்மேற் செல்லுதல் வஞ்சி எதிரூன்றல் காஞ்சி என்பார். இது காஞ்சியதிர்வு முதல் முனைகடி முன்னிருப்பு ஈறாக இருபத்தொரு துறைகளையுடையது.

***காஞ்சித்திணை பெருந்திணைக்குப் புறனாயவாறு :*** பெருந்திணை மடலேறுதல் முதலியவை பற்றி வருமாறு காஞ்சித்திணை மறவெறி மிக்குத் தன்னைத்தான் வருத்திக் கோடலானும் அவ்வாற்றான் துன்பத்தைப் பெருக்கி மடிதல் ஒப்புமையானும். இளமைதீர் நிறம் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுநிறம் முதலியவை இன்பம் நிலையாமையை உணர்த்தி நிற்குமாறு போலக் காஞ்சித் துறைகள் இளமை முதலியவற்றின் நிலையாமையை உணர்த்தி நிற்றலானும் பெருந்திணை சான்றோரான் இகழப் படுதலையும் காமம் நிலையின்மையும் நோக்கி. அறம்புரி சுற்றமொடு சிறந்தது பயிற்றற்கு முற்படுதல் போலக் கூற்றத்தின் வலிமையையும் நிலையாமையையும் நோக்கி அருளொடு புணர்ந்து செம்பொருள் காணுதல் பிறந்த தன் பயன் என உணர்தற்கு ஏதுவாக உள்ளமையானும் இன்ன பிற ஒப்புமைகளானும் காஞ்சி–பெருந்திணைக்குப் புறனாயிற்று. நச்சினார்க்கினியர் பெருந்திணை பிரமம் முதலிய நான்கு மணங்களைப் பெறுதல் போலக் காஞ்சி அறம்பொருள் இன்பம் நிலையாமை என மூன்றையும் பெறுதலான் காஞ்சி பெருந்திணைக்குப் புறனாயிற்றென்பார்.

***காஞ்சியதிர்வு :*** (காஞ்சி–பு–வெ) வஞ்சியார்படை மேலிடுதலைப் பொறாத வீரருடைய வெற்றியைத் துடி முழங்கச் சொல்வது.

*காட்சி :* (தொல் –புற–5) போரிட்டுத் துறக்க முற்ற வீரனின் பெயரும் பீடும் எழுதி நடுதற்குரிய கல்லினைத் தேர்ந்து காணுதல். (கைக்–பு–வெ) வண்டுகள் பறக்கும் பூக்களையுடைய சோலையினிடத்துத் தலைவன் கருந்தடங்கண்ணரியைக் கண்டு விரும்பியது.

*காடுவாழ்த்து :* (தொல்–புற–19–காஞ்சி) பலரும் இறந்தொழியத்தான் மட்டும் அங்ஙனம் செல்லாது நிற்கும் புறங்காட்டினை வாழ்த்துதல். (காஞ்சி–பொது–பு–வெ) பெரிதாக ஒலிக்கும் சாப்பறையின் 'கல்' லென்று அநு கரணத்தையுடைய சுடுகாட்டை வாழ்த்தியது.

*காண்டல் :* (கைக்–பு–வெ) மதுப்பொழியும் மாலையணிந்த தலைவனை அழகிய நுதலினையுடையாள் கண்டு விருப்பத்தால் சோர்ந்து மெலிவது.

*காண்டல் வலித்தல் :* (கைக்–பு–வெ) மைவரைநாடனைத் தலைவி மறுபடியும் காணுதலைவேண்டு மென்று நிச்சயித்தது.

*காதலன் இழந்த தாபத நிலை :* தொல்–புற–19–காஞ்சி) கணவனை இழந்த மனைவி கைம்மை நோன்பு புரிந்துழலும் தவநிலை.

*காதலியிழந்த தபுதார நிலை :* (தொல்–புற–19. காஞ்சி) காதலனாகிய கணவன் தன் மனைக் கிழத்தியை இழந்தநிலை. தபுதாரம் –தாரம் தவறியது.

*காதலிற் களித்தல் :* (பெருந்–பு–வெ) தலைவனுடைய மார்பினைப் பொருந்தி நீங்குதலாகிய அன்பினால் தலைவி களிப்புற்றது.

*காந்தள் :* (தொல்–புற–5) வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டயர்ந்த காந்தள் என்பார் ஆசிரியர். போர் மேற்கொள்ளும் மறவர்க்கு வெற்றி வேண்டி வேலன் காந்தள் பூவைச் சூடி ஆடும் வெறியாடல் இதனை மறநிலைக் கூத்து என்ப. (உழிஞை–பு–வெ) கரிய கடலினுள் ஒளிந்த சூரபன்மாவைக் கொன்ற முருகன் காந்தள் பூவினைச் சூடியதைக் கூறுவது.

*காமப்பகுதி கடவுளும் வரையார் :* (தொல்–புற–23–பாடாண்டிணை) காமப்பகுதியாக வரும் பாடாண்டிணைப் பகுதி உருவகமாக அமைந்து திகழும் தத்துவப் பொருளாகிய கடவுளர் பாங்கின் வருதலையும் அவரல்லாத தெய்வப் பகுதியாகிய ஏனோர் பாங்கின் வருதலையும் புலவோர் நீக்கார். மாயோன் சேயோன் முதலானோர் கடவுளர்–காலம் உலகம் என்னும் சொல்லதிகாரத்து வருவன ஏனோரோகிய தெய்வப் பகுதி. இவர்கள் பாடாண்டிணை தலைவராதற்குரியர் என்றவாறு.

***காமம் நீத்தபால்*** (தொல்—புற—17—வாகை) தத்தமக் குரிய கடமைகளை மேற் கொண்டு அவற்றைப் பிழையின்றி நடத்தும்வழி மண்ணும் பொன்னும் பெண்ணுமாகிய மூவகை வேட்கையினும் நீங்கி ஒழுகும் பகுதியாகிய வாகை.

***கார் முல்லை :*** (முல்—பொது—பு—வெ) பகைவயிற் சென்ற தலைவன் பாசறையினின்று வாராமுன் அவன் குறித்த கார்ப்பருவம் வரக் கண்டுதலைவி சொல்வது.

***கால்கோள்*** (தொல்—புற—5) பீடும் பெயரும் உருவும் பொறித்த கல்லினை நிறுத்தற்குரிய இடத்தைக் கொளுவுதல் கல் நடுவிழாவிற்குக் கால்கோள் செய்தல்.

***காலம் மூன்றொடு கண்ணியவரும் :*** (தொல்—புற—30 பாடாண்டிணை) துயிலெடை முதலாய பாடாண் துறைப் பகுதிகள் முக்காலத்தொடும் பொருத்திக் கூறுமாற்றான் வரும்.

***காவல் முல்லை :*** (வாகை—பு0வெ) கடலை வேலியாக உடைய உலகத்தைக் காக்கும் மன்னவனது காவற் சிறப்பைக் கூறுவது.

***கிணைநிலை :*** (வாகை —பு— வெ) மருதநிலத்து வேளாண்மை புரியும் வேளாளன் பெரும்புகழை கிணைப்பறை முழக்கும் கிணைவன் கூறுவது.

***கிளிவென்றி :*** (ஒழிபு—பு—வெ) பூவைப் புள்ளிற்கு மாறாகத் தலைவி கிளிப்புள்ளிற்குக் கற்பித்துப் பேசச் செய்யும் வெற்றியைக் கூறுவது.

***குடிநிலை :*** (கரந்தை—பு—வெ) மண்ணுலகத்து தொன்மையும் மறனும் கொண்டு நிரம்பிய பழங்குடியின் வரலாற்றைச் சிறப்பித்துக் கூறுதல்.

***குடுமி களைந்த புகழ்சாற்று நிலை :*** (பாடாண்—பு—வெ) பகைவரது நீண்ட மதிலையழித்து வென்ற வேந்தன் தன் மயிர்ச்சிகையைக் கட்டி முடித்தல் குடுமிகளைதல் என்பதற்கு உரையாசிரியர் மதிலரசர் மணிமுடிகடந்தான் என்று மாரம் என்பார். முடியணிதற்பொருட்டு மயிர்ச்சி கையக் களைதல் மரபு.

***குடைச்செலவு :*** (காஞ்சி – பு—வெ) வஞ்சி வேந்தனோடு போரிடக் காஞ்சி வேந்தன் குடையைப் புற வீடு விட்டது. புறவீடு = செலுத்துதல்.

***குடைநாட் கோள் :*** (தொல்—புற— 11 உழிஞை ) மாற்றாரது அரணினை முற்றிக்கைக் கொள்ளுதற் பொருட்டுக் கணிவன் குறித்த நாளில் கொற்றக் குடையை புற வீடு செய்தல்.

***குடைநிலை :*** (வஞ்சி—பு—வெ) புலவர் புகழ்ந்து பாட வேந்தன் மாற்றார் மேல்படையெடுத்தற்கு முன் நல்ல நாளிலே தன் குடையைப் புறவீடு செய்வது.

***குடை மங்கலம் :*** (பாடாண்—பு—வெ) நாற்றிசையும் வென்று வீற்றிருக்கும் வேந்தன் கீர்த்தியுடைய குடையைப் புலவோர் புகழ்ந்து கூறுவது.

***குடைமுல்லை :*** (வாகை—பு—வெ) பகைவரை வென்ற முழுவலியுடைய வேந்தனது குடையைப் புகழ்ந்து கூறுதல்.

***குதிரை நிலை :*** (தொல்–புற–14 – தும்பை) போர்ப்படையின் ஒன்றாகிய குதிரைப்படையுள் குதிரையின் நிலையைக் கூறுதல்.

***குதிரை மறம் :*** (நொச்சி – பு– வெ) பெரிய மதிலிடத்து விளங்கும் குதிரையின் மறவீறு புலப்படக் கூறுவது. (தும்பை–பு–வெ) போர்க்களத்தில் விரைந்து செல்லும் குதிரையின் திறப்பாட்டைக் எடுத்துக்கூறுவது.

***குதிரை வென்றி :*** (ஒழிபு–பு–வெ) ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியையும் தேர்ந்த குதிரையின் மறத்தால் எய்தும் வெற்றியைக் கூறுவது.

***குழவிக் கட்டோன்றிய காமப்பகுதி :*** (தொல்–புற–24–பாடாண்டிணை) மக்கள் யாக்கையினராய்க் கடவுட்டன்மையுடையாரைக் குழவிப் பருவத்தினராக வைத்துத் தம் காதல் தோன்றப் புகழும் பாடாண் பகுதி. உரையாசிரியர் பிற்காலத்துச் சிற்றிலக்கிய வகையாகிய பிள்ளைத் தமிழ் போன்றது என்பர்.

***குழவி மருங்கினும் கிழவதாகும்*** : (தொல்–புற–24 பாடாண்டிணை) குழவிப்பருவத்தினரிடத்தும் காமப்பகுதி உரியதாகப் பாடாண் பாட்டு நிகழும்.

***குற்றிசை :*** (இரு–பெருந்–பு–வெ) பிறர்மனை விரும்பும் தீயொழுக்கம் பொற்றாரகலம் புல்லிய மகளிர்க்கு அற்றாங்கொழுகாது அறம் கண்மாறியது என்பார் ஐயனாரிதனார்.

***குற்றுழிஞை :*** (உழிஞை–பு–வெ) பகைவருடைய மதிலின் கண்ஏறி வீரன் ஒருதானாகி மாறுபாட்டினைப் பெருக்கியது (2) சங்கு முழங்க வயிர் ஆராவாரிக்கக்காவற் காட்டைக் கடந்து வீரர்கள் மதிலின் கண்புகுவதும் அத்துறையாகும். (3) சொல்லுதற்கரிய கிடுகுப்படையினையுடைய படை மறவர் ஆடுதலோடு நொச்சியார் அரணத்தைக் குறுகினும் குற்றுழிஞை என்னும் துறையாம்(குறுமை–காண்க).

***குறுங்கலி :*** (ஒழிபு–பு–வெ) நாறிருங்கூந்தல் மகளிரை நயப்ப வேறுபாடு வேட்கைவீயக் கூறியது. தலைவி வருந்தியிருப்பவும் அவளை கைவிடுதலாகிய செயல்.

***குறுமை :*** (தொல்–புற–உழிஞை) திறப்பட ஒருதான் மண்டிய குறுமை = அரணகத்தும் ; மேலும இருந்து புறத்தோனை வருத்திய அகத்து வேந்தன் படையொடு ஒரு திறப்பட நெருங்கிப் புரியும் போர். இதனைக் குற்றுழிஞை என்பார் இளம்பூரணார். குறுமை = நெருங்கும் தன்மை.

***குறுவஞ்சி :*** (வஞ்சி–பு–வெ) வஞ்சிமன்னன் படை எதிர்ந்ததை அஞ்சிப்பகை மன்னர் திறை முதலிய கொடுத்துத்தன் நாட்டைப் பெற்றுத்தன் குடிமக்களைக் காத்த நிலையைப் கூறுவது. (2) வஞ்சிமன்னன் தங்கியிருக்கும் பாசறையின் சிறப்பினை எடுத்துக் கூறலும் குறுவஞ்சி என்னும் துறையாகும்.

***கூட்டத்துக் குழைதல் :*** (பெருந்–புற–30–பாடாண்) பரிசு பெற்றுவரும் கூத்தன் பரிசு நாடிச் செல்லும் கூத்தனைப் பரிசளிக்கும் வள்ளியோனிடம் செல்லுமாறு செலவிடுதல் செல்லும் வழிகளை விளக்கிக் கூறுதல் (பாடாண்–பு–வெ) ஏத்திச் சென்ற இரவலன் கூத்தரை ஆற்றுப்படுத்தியது.

***கூத்தரும் பாணரும் விறலியும் ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிய பக்கம் :*** இது எல்லா ஆற்றுப் படைக்கும் பொதுவாகிய இலக்கணம். வள்ளியோன் ஒருவன்பால் மிக்க செல்வத்தைப் பரிசிலாகப் பெற்றுவரும் கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் வரும் வழியிடத்தே தம்மைக் காண் போர்க்கு இவர் மன்னரோ பெருஞ்செல்வரோ எனக் காட்சி மிகத் தோன்றிப் பரிசில் பெறாதாராய்த் தம்மை எதிர்ப்பட்டுத் தோன்றி வியந்து நோக்கும் பாணர் முதலிய இரவலக்குத்தாம் பெற்ற பெருவளத்தைத் தெரிவித்து அவரை அவ்வள்ளியோன் பாற்சென்று பயன்கொள்ளச் சொல்லி ஆற்றுப்படுத்தலாகிய துறைகளின் பகுதி – பாடாண்டிணைக்குரியதாகும்.

***கூதிர்ப் பாசறை :*** (தொல்—புற—17 வாகை) பகைவயிற் பிரிந்த மன்னர் கூதிர் காலத்துப் பாசறையிலிருந்து போர்த்தொழிற் பாற் காதலால் உளமொன்றிப் புரியும் போர்ச் செயலைப் பற்றிக் கூறுதல் (வாகை—புற—வெ) கூற்றனையான் வியன்கட்டூர் கூதிர் வான் துளிவழங்க ஆற்றாமை நனி பெருகவும் அயில்வேலோன் அளிதுரந்தநிலை என்பார் ஐயனாரிதனார் தலைவன் பாசறையிடத்து இருந்து தலைவியைப் பற்றி நினையின் அது வாகைத்துறையாகாது, வஞ்சித்திணையின் பாற்படும்.

***கூழைதாங்கிய எருமை :*** (தொல்—புற—14 துமைப்) ஒருவன் ஒருவனை உடைபடை புக்குக் கூழைதாங்கிய எருமை = இருசாராரும் கலந்து புரியும் கடும்போர் காரணமாக அணிசிதைந்த படைக்குள் புகுந்து ஒருவன் ஒருவனைக் கூழைப்படைபோலத் தடுத்து நிறுத்திய எருமை மறம் என்னும் துறை. கூழை=பின்னணிப்படை.

***கைக்கிளை :*** (தொல்—புற—29. பாடாண்) புரைதீர் காமம் புல்லிய வகையரனன்றி ஒருதலைக் கேண்மையாக இருபாலரிடத்தும் தோன்றும் காமக் குறிப்பினால் வரும் கைக்கிளை அகப்புறமாய் நிகழும். (பாடாண்—ப—வெ) "தண்டாக் காதல் தளரியல் தலைவன் வண்டார் விரும்பிய வகையுரைத்தன்று" காமஞ்சான்ற மடந்தை தன் தலைவனைக் கூட விழைந்தது.

***கைக்கிளைப் படலம் :*** (பு—வெ) பன்னிருபடலம் கைக்கிளை—பெருந்திணைகளை அகப்புறத்திணையாகக் கொண்டமையின் புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் புறப்பொருளின் பால் வைத்துக் கைக்கிளை ஒழுக்கங் கூறுகிறார். தலைவன் தலைவியரின் இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னும் பின்னும் நிகழ்வனவற்றைக் கைக்கிளையாகக் கொண்டு அதனைத் தலைவன் கூற்று தலைவி கூற்று எனப் பிரிந்துத்துறை வகுத்துக் கூறுகின்றார் அம்முறையான். காட்சி, ஐயம், துணிவு, உட்கோள், பயந்தோர்ப்பழிச்சல், நலம்பாராட்டல் நயப்புற்றிரங்கல் புணரா இரக்கம் வெளிப்பட இரத்தல் என்னும் ஒன்பது துறைகளாகத் தலைவன் கூற்று நிகழும் பெண்பாற் கூற்று காண்டல், நயத்தல், உட்கோள் மெலிதல், மெலிவொடு வைகல், காண்டல் வலித்தல், பகல் முனிவுரைத்தல் இரவு நீடுபருவரல், கனவினரற்றல் நெஞ்சொடு மெலிதல் என்னும் பத்துத் துறைகளையுடையதாகும்.

***கையறுநிலை :*** (தொல்—புற—19—காஞ்சித்திணை) கழிந்தோர் தேஎத்துக் கழிபடர் உறீஇ ஒழிந்தோர் புலம்பிய கையறுநிலை=வாழ்நாள் கழிந்து மாய்ந்தோர் மாட்டு அவர்

தமக்கு ஏமமாக இருந்தமையை எண்ணிப் பெருந்துயர் உற்றுமற்றையோர் நொந்து தமியராய்ப் புலம்பும் நிலை. (கரந்தை–பு–வெ) வெருவரும் வாளமரிற்பட்டுமாய்ந்தோரைக் கண்டு பாணர் முதலானோர் கையற்றுக் கூறுவது (சிறப்–பொதுவில்–பு–வெ) வீரக்கழலையணிந்த வேந்தன் மாய்ந்தானாக அவனைச் சேர்ந்தோர் அவன் இறந்தமையைச் சொல்லிக் கையற்றுத் தளர்தல்.

*கொடிநிலை :* (தொல்–புற–27 –பாடாண்) நாள் மீனாகிய கொடிநிலை, அவை கொத்தாக இராசி மண்டலங்களிற் படர்ந்திருத்தலின் கொடிநிலை எனப்பட்டது. இது கந்தழி வள்ளியைப் போலக் கடவுள் வாழ்த்தொடு பொருந்திவரும். இளம் பூரணார் போர்க் கொடி என்பார் நச்சினார்க்கினியர் ஞாயிற்றுப் புத்தேள் என்பார். நாவலர் சோம சுந்தரபாரதியார் அரசர்க்குரிய சின்னமாகிய கொடி என்பார். மு. இராகவையங்ககார் முகில் என்பார் வெள்ளைவாரணனார் மாற்றாரை வென்றுயர்த்த கொடி என்பார். (பாடாண்–பு–வெ) அரன் அயன் அரி என்னும் கடவுளர் மூவர் கொடியுடன் ஒப்பிட்டு மன்னவனது கொடியைப் புகழ்ந்து கூறுதல்.

*கொடுப்போர் ஏத்திக் கொடா அர்ப்பழித்தல் :* (தொல்–புற– 29 பாடாண்) பாணர் முதலாய இரவலரும் புலவரும் தன்னைப் பேணிய தண்ணிளியாரைப் பாராட்டியும் அங்ஙனங் கொடாத செல்வரைப் பழித்துங் கூறுதலாம் (ஒழிபு–பு–வெ) கார்முகில் போலும் கொடுப்போரை ஏத்தியும், மன்னரேயாயினும் கொடாரைப் பழித்தும் பாணர் முதலானோர் கூறுதல்.

*கொடை :* (தொல்–புற–7–வெட்சி) வெட்சியார் கவர்ந்து வந்த ஆனிரைகளில் ஒருபகுதியை இரவலர்க்கு வழங்குதல். (தொல்–புற–7. வஞ்சி) கொடுத்தல் எய்திய கொடை அஃதாவது வஞ்சி மறவர் ஒன்னார் புலத்தைக் கூரெரி கொளுவி வென்று தொகுத்த பொருளை அரசன் பரிசிலர்க்குக் கொடுத்தல் (தொல்–புற–17வாகை) இடையில் வண்புகழ்க் கொடைமையானும் வாகை எய்தும் என்பார். இடையீடில்லாத கொடையால் வரும் புகழ் வாகை எனப்படும். (வெட்சி–பு–வெ) ஈண்டிய நிரை ஒழிவின்றி வேண்டியோர்க்கு விரம்பிக் கொடுத்தல்.

*கொடை வஞ்சி :* (வஞ்சி–பு–வெ) வஞ்சி வேந்தன் தன்னைப் பாடிய பாணர் முதலானோர்க்குச் செல்வம் முதலியனவற்றை வழங்குதல்.

*கொண்டகம் புகுதல் :* (பெருந்–பு–வெ) வேட்கை மிகுதலான் தலைவியை மாலையாற் பிணித்துத் தன்னகத்தே கொண்டு செல்லுதல்.

*கொள்ளார் தேஎங் குறித்த கொற்றம் :* (தொல்–புற–10 . உழிஞை) அரணத்தை முற்றிய வேந்தன் பகைநாட்டினைத் தன் கருத்திற்கேற்ப நோக்கிய வெற்றி வீறு.

*கொற்ற வஞ்சி :* (வஞ்–பு–வெ) வையகம் வணங்கி ஏத்தும் வண்ணம் வாட்போரிட்ட வேந்தன் புகழை மிகுத்துச் சொல்வது.

*கொற்ற வள்ளை :* (தொல்–புற–7. வஞ்சி) கொற்றங்கொண்ட வேந்தன் தோற்ற வேந்தனது குன்றாத வளங்களைக் கொள்ளுதல். வளம்=வள்ளை என்றாகியது.

கடவுளரின் வெற்றியப் புகழை ஏத்தி மகளிர் பாடும் உரற்பாட்டு கொற்றவள்ளையாம் அது கடவுள் வாழ்த்தாக வரும். இளம்பூரணார் வஞ்சித் திணையிற் கூறப்பட்ட கொற்ற வள்ளையே இது என்றும் துறை கூறுதல் கருத்தாயின் வஞ்சி என்றும் புகழ்தல் கருத்தாயின் பாடாண்டிணை என்றம் கூறுவார். நச்சினார்க்கினியர் வெற்றி நிலை என்பார். (வஞ்சி—பு—வெ) மன்னவன் புகழை எடுத்துக் கூறிப் பகைவர் நாடு அழிவதை எண்ணி வருந்தியது என்பார் ஐயனாரிதனார்.

***கொற்றவுழிஞை :*** (உழிஞை—பு—வெ) பகைவரது காவல் அரணத்தைகைக் கொள்வான் வேண்டிப் படையொடு பரந்து செல்வது.

***கொற்றவை நிலை :*** (தொல்—புற—4 வெட்சி) மறத்துறைக்குரிய தெய்வமாகிய கொற்றவையைப் பரவுதலும் அவள் தண்ணளியைக் கூறுதலும். (வெட்சி—பு—வெ) 1. ஒளியின் நீங்கா விறற் படையோளாகிய கொற்றவையின் தண்ணளி சான்ற அருளைக் கூறுதல் – (1) (வஞ்சி—பு—வெ) தமது மன்னவன் வெற்றி கொள்ளப் படையலிட்டுக் கொற்றவையின் ஆற்றலை மறவர்கள் எடுத்துக் கூறுவது. (2) மைந்துடைய வீரமறவர்தம் செய்தொழில்களை எடுத்துக் கூறினும் அத்துறையாகும்.

***கோழி வென்றி :*** (ஒழிபு—பு—வெ) சேவற் போரில் ஒருசாரார் சேவற் கோழி வென்ற சிறப்பைக் கூறுதல்.

***சால்பு முல்லை :*** (வாகை—பு—வெ) வான்றோயும் மலையன்ன சால்புடைய சான்றோர்தம் பெருமையைக் கூறுதல்.

***சிருங்காரநிலை :*** (தும்பை—பு—வெ) பகைவரும் புகழப் போரில் வெற்றியை விளைத்துப் பின் மாய்ந்த மறவனின் மனைவி அவனைத் தழுவி வருந்துதல்.

***சிவல் வென்றி :*** (ஒழிபு—பு—வெ) சிவல் = காடைப்புள். சிவல் போரில் ஒரு சாரார் சிவலின் வெற்றியைக் கூறுவது.

***சிறப்பிற் பொதுவியற் பால*** (பு—வெ) பொதுவியலை. நான்கு பிரிவாகக் கூறுகிறார் இவ்வாசிரியர். அவற்றுள் இரண்டாவது இயல் சிறப்பிற் பொதுவியல் அது. முதுபாலை, சுரநடை, தபுதாரநிலை, தாபதநிலை, தலைப்பெயல் நிலை பூசல் மயக்கு நிலை, மூதானந்தம், ஆனந்தம், ஆனந்தப் பையுள் கையறுநிலை என்னும் பதினொரு துறைகளையுடையது.

***சீர்சால் வேந்தன் சிறப்பெடுத்துரைத்தல் :*** (தொல்—புற—5) படை மறவர்கள் புகழ் சான்ற தம் வேந்தனது வீரச்சிறப்பையும் வெற்றிச் சிறப்பையும் பகைவர் அஞ்சுமாறுற எடுத்துரைத்தல்.

***சுரத்துய்த்தல் :*** (வெட்சி—பு—வெ) வெட்சியர் கவர்ந்த ஆனிரைகளை அவை வருந்தாமல் அரிய வழியிடத்தும் காட்டிடத்தும் செலுத்திவருதல்.

***சுரநடை :*** (சிற—பொது—பு—வெ) முதிர்ந்த பிணக்கமோங்கிய மூங்கிற் காடு நிறைந்த பாலை நிலத்துத் தலைவனையிழந்த தலைவியின் நிலையைச் சொல்வது.

***சூதர் ஏத்திய துயிலெடை நிலை :*** (தொல்–புற–30–பாடாண்) துயில் கொண்டிருக்கும் மன்னவனை அவன் பேராண்மையைப் புகழ்ந்து சூதர் எழுப்பும் நிலை. சூதர் = அரசன் புகழ் பாடித்துயிலெழுப்புவோர். எடைநிலை = எழுப்பும் நிலை.

***சூது வென்றி :*** (ஒழிபு–பு–வெ) சூதுப் போரின் கண் ஒருவர் வென்ற நிலையைக் கூறுதல்.

***செந்துறைவண்ணப் பகுதி வரைவின்று :*** (தொல்–புற–22 பாடாண்) உயர்வுநவிற்சியின்றிப் பட்டரங்குச் செந்துறையாகக் கூறப்பெறும் வண்ணமமைந்த பாடாண் பாட்டுவகை. வண்ணம் = செய்யுளுள் ஒதப் பெற்ற ஓசைவகைகள்.

***செருவகம் :*** (தொல்–புற–14 – தும்பை) இருதிறத்தாரும் போரிடும் போர்க்களம்.

***செருவிடை வீழ்தல் :*** நொச்– பு–வெ) ஆழமுடைய அகழி சூழ்ந்த அரணத்தைக் காப்போர் காவற் காட்டினைக் காத்துப் போரிற் பட்ட வீரர்களின் வெற்றியைச் சொல்வது.

***செல்கென விடுத்தல் :*** (பெருந்–பு–வெ) புறத்தொழுக்கம் கருதிய தலைவனை அவன் செல்லுதலைப் பார்த்துச் சினந்த தலைவி அவனைப் போக எனவிடுத்தல்.

***செலவழுங்கல் :*** (இரு–பெருந்–பு–வெ) புறத்தொழுக்கங் கருதிய தலைவன் தன் தலைவி வருந்துமென எண்ணிப் போக்கொழிந்தது.

***செலவு :*** (தொல்–புற–3–வெட்சி) பகைப்புலத்தவர் தம் ஒற்றறிய வெட்சி மறவர் படை நிரந்து செல்லும் செய்கை. (வெட்சி–பு–வெ) வில்லேருழுவர் பகைப் புலத்தைக் கருதிக்கல் நிறைந்த காட்டைக் கடந்து செல்லும் செலவு.

***செவியறிவுறூஉ :*** (தொல்–புற–29. பாடாண்) உயர்ந்தோர் நடுவில் தன்னை வியந்து காட்டுதலின்றி அடங்கி ஒழுகுதல் கடப் பாடா மென உள்ளங்கொள்ளுமாறு கூறும் அறிவுரை. (பாடாண்–பு–வெ) அறந்தெரிந்த செங்கோல் வேந்தனுக்கு மறந்திரிபில்லாத அரசியற் சூழ்ச்சிகளை அறிவுறுத்தல்.

***செழுமடலூர்தல் :*** (இரு–பெருந்–பு–வெ) தலைவியின் உருவழகு முதலியவற்றைப் பாடிக்கொண்டு பனைமாமடல் ஊர்ந்து தன் காதலை வெளிப்படுத்தல்.

***சென்ற உயிரின் நின்றயாக்கை :*** (தொல்–பு–13. தும்பை) பகைவர் எய்யும் அம்பும் செலுத்திய வேலும் செறிதலான் உயிர் நீங்கிய பின்னும் துளங்காமல் நிற்கும் உடம்பு. இதனை வெருவருநிலை என்பார் ஐயனாரிதனார்.

***சென்று தலையழித்தல் :*** (தொல்–புற–12. தும்பை) மைந்து பொருளாகப் போர் மேற்கொண்டுவரும் வேந்தனை எதிர்சென்று அவன் செருக்கினை அழித்தல்.

***தகர்வென்றி :*** (ஒழிபு–பு–வெ) ஆட்டுக்கிடாய்ப் போரின் கண் ஒரு சாரார் கிடாய் வென்ற வெற்றியைக் கூறுதல்.

***தந்துநிறை :*** (தொல்–பு–3. வெட்சி) மாற்றார் ஊரின் கண் சென்று கவர்ந்த ஆனிரைகளை வெட்சி மறவர்கள் தம் ஊரின் கண் கொண்டு வந்து நிறைத்தல் (வெட்சி–

பு—வெ) வார் வலந்த துடிவிம்ம வெட்சியார் தம் ஊரார் ஆனிரைகளைத்தம் மற்றத்திடத்துச் செலுத்தியது.

*தபுதார நிலை :* (தொல்—புற— 19. காஞ்சித்திணை) கணவன் தன் காதலியை இழந்தநிலை. தாரம் தபுநிலை—தபுதல்=இறத்தல். (சிற—பொது—பு—வெ) மனைவியை இழந்து தனித்து இல்லத் திருந்து வருந்தும் தலைவன் நிலை.

*தலைக் காஞ்சி :* (காஞ்சி—பு—வெ) மாற்றார்தம் மறத்தைக் கடந்த மறவன் வெட்டுண்டு வீழ்ந்த தலையினை நோக்கி அவன் மதிப்பை உயர்த்திச் சொல்வது

*தலைத்தாள் நெடுமொழி :* (தொல்—புற—5) தலையாய முயற்சியொடு போர் மறவர் வஞ்சின மொழிகளைக் கூறுதல். தாள்=முயற்சி, நெடுமொழி=சபதம்.

*தலைத்தோற்றம் :* (வெட்சி—பு—வெ) வெட்சி மறவர் மாற்றாரது ஆனிரைகளைக் கவர்ந்து வருதலை நோக்கிச் சுற்றத்தார் உளமகிழ்ந்து கூறுதல்.

*தலைப்பெயல்நிலை :* (தொல்—புற—19. காஞ்சித்திணை) மாய் பெருஞ் சிறப்பின் புதல்வற் பயந்த தாய் தபவரும் தலைப்பெயல் நிலை = பெருஞ்சிறப்பொடு பொருது மாய்ந்த புதல்வனை ஈன்ற தாய் தானும் அவனொடு மடியக் கருதிப் போர்க் களத்திற்கு வந்தநிலை — தலைப்பெயல் = ஒன்றுபடுதல் (சிற—பொது—பு—வெ) உலகிற்கு ஒரு மகனை ஈன்றதாய் தானும் புதல்வனொடு மடிந்தது.

*தலை மாராயம் :* (காஞ்சி—பு—வெ) பகைவரது தலையைக் கொண்டு வந்த வீர மறவனுக்கு மன்னன் அவன் உளமுவப்பப் பரிசில் நல்கியது.

*தலையொடு முடிதல் :* (தொல்—புற—19. காஞ்சி) முலையும் முகனும் சேர்த்திக் கொண்டோன் தலையொடு முடிந்த நிலை. கணவனது உடலற்ற தலையைத் தன் மார்பொடு சேர்த்திக் கொண்டு இறந்த தலைக் காஞ்சி. (காஞ்சி—பு—வெ) மண்டமருள் மாறாத வலிமையுடைய கணவனின் தலையொடு தலைவி உடன் மடிந்தது.

*தழிஞ்சி :* (தொல்—புற—7. வஞ்சித்திணை) அழிபடை தட்டோர்தழிஞ்சி = உயிரை அழிக்கும் வாள் முதலிய படைக்கலன்களை தனது தறு கண்மையான் தடுத்து விழுப்புண்பட்ட மறவனை வேந்தன் பரிவொடு தழுவிப் பாராட்டுதல். (வஞ்சி—பு—வெ). தனக்குப் புறமுதுகிட்டு உடையும் பகைவர் மேல் படைக்கலன்களை வீசாத மறவனின் தறுகணாண்மையை விரும்பிச் சொல்லியது. (காஞ்சி—பு—வெ) பரந்து எழும் பெரிய சேனை தங்கள் எல்லையிற் புகாதபடி அரிய வழியிடத்தை மறவர்கள் காத்து நிற்பது.

*தன்னை வேட்டல் :* தும்பை—பு—வெ) தன் வேந்தன் மாய்ந்தனாக அது பொறாத மறவன் தன் உயிரை வேள்வி செய்தது. வேட்டல் = எரி மூழ்குதல். (2) போர்க்களத்தில் தலைவன் பட்டமையறிந்த மனைவி கணனைக் காணப் போர்க்களத்திற்குச் செல்லுதலும் அத்துறையாகும்.

*தாபத நிலை :* (சிற—பொது—பு—வெ) கணவன் மாய்ந்தபின் மனைவி கைம்மை நோற்றிருத்தலைக் கூறுவது.

*தாபதப்பக்கம் :* (தொல்—புற—16 வாகை) நாலிருவழக்கிற் றாபதப்பக்கம் இயமம், நியமம், இருக்கை, வளிநிலை, தொகைநிலை, பொறைநிலை, ஒடுக்கம் ஆகிய எண்வகையையுடைய யோகநிலை பற்றி ஒழுகும் தாபதர்தங் கூற்றின் கண் மிகுதிப்படும் வாகைப்பகுதி. தாபதர்=முனிவர். புலன் வழி வரும் அவா வைத்த புத்தவர் தாபதர். அணிமா முதலிய சித்திகளைப் பெற்றவர் தாபதர் எனினும் ஆம் – நச்சினார்க்கினியர் ஊண்நசை யின்மை முதலிய நோன்புகளைக் கூறுவார்.

*தாமேஎய்திய தாங்கரும் பையுள்* : (தொல்—புற—19. காஞ்சி) மூப்பும் நோயும் முதலிய காரணங்களானும் புயல் வெள்ளம் முதலிய இயற்கைச் சீற்றங்களானும், வரும் துன்பங்களும், கள்வர் முதலானோரால் வரும் ஊறுகளுமாம்.

*தார்நிலை :* (தொல்—புற—14 தும்பை) வேன்மிகுதானை மொய்த்த வழி ஒருவன் தான் மீண்டெறிந்த தார்நிலை. தன் வேந்தனைப் பகைவர் சேனை மொய்த்துச் சூழ்ந்த வழி அது கண்டு பொறாத கொடிப்படைத்தலைவன் ஒருவன் அதனின் நீங்கி வந்து வேந்தனைச் சூழ்ந்த படையைப் பொருது எறிந்த நிலை தார்நிலை. தார்=முன்னணிப்படை. (தும்பை—பு—வெ) 1. பகை வேந்தனது முன்வரும் படையைத் தடுத்துவெல்வேன் என ஒருவீரன் மன்னவனிடம் கூறுதல் (2) தன் வேந்தனைப் பகைவன் சேனை சூழ்ந்த நிலையில் ஒரு தமியனாக ஒரு வீரன் சென்று அப்படையைத் தடுத்தலும் அத்துறையாகும்.

*தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப் பாகுபட மிகுதிப் படுத்தல்:* (தொல்—புற—15 —வாகை) இது வாகைத்திணைக்குரிய இலக்கணம்.

குலமும் குடியும் பற்றிய மரபானும் மேற் கொண்ட பணிகளின் நிலைமைகளானும் அவரவர்க்கமைந்த வருத்தமில்லாத ஒழுகலாறுகளுள் தமக்குரியவாக வகைப்பட நின்ற செயற்கூறுகளை அவை விளக்கமுறத் தம் அறிவாற்றல்களான் பிறரினும் மேம்படச் செய்து விளங்குதல் வாகை என்னும் புற ஒழுகலாறாகும்.

*தானை நிலை :* (தொல்—புற—14. தும்பை) காலாட்படையின் நிலையினைக் கூறுதல் (தும்பை—பு—வெ) முற்படுவோர் தடுப்போர் என்னும் இருவகைப் படை மறவர்களும் வீரத்தைப் பாராட்டப் போர்க்களத்து ஒருவன் சிறப்பெய்துவது.

*தானை மறம் :* (தும்பை—பு—வெ)பொர எதிர்ந்த இருவகைச்சேனைகள் தாம் பொருது மடியாமல் ஓம்புதலைச் செய்யும் உயர்வைக் கூறுதல்.

*திறை கொண்டு பெயர்தல் :* (உழிஞை – பு— வெ) எயில் காக்கும் நொச்சி வேந்தன் உழிஞை வேந்தனைப் பணிந்து வழி மொழிந்து திறையளக்க அவற்றைப் பெற்று அவன் தன்னாடு திரும்புதல்.

*துடிநிலை :* (தொல்—பு—4—வெட்சி) போர்க் கருதி எழும் மறவர் தம் மற உணர்வு ஒருங்கு முற்றக் கூட்டும் துடிப்பறையின் நிலையைக் கூறுதல் (வெட்சி—பு—வெ) தொடுகழல் மறவர் தொல் குடிமரபினையுடையதாய் ஒலிக்கும் துடியைக் கொட்டுபவன் குணத்தைச் சொல்வது.

*துணிவு :* (கைக்—பு—வெ) காட்சியிற்கண்டு ஐயுற்ற தலைவன் தன்னாற் காணப்பட்டவள்

தெய்வ மகளல்லள் மானிட மகளே எனத் துணிதல்.

***தும்பைத் திணை :*** (தொல்–புற–12) ஒருவேந்தன் தனது வலிமையை நிறுவுதற் பொருட்டுப் போரிடவர அவனை இருந்த வேந்தன் எதிர்த்து அவன் செருக்கினை அழிக்கப் போரிடும் ஒழுகலாறு தும்பைத்திணையாம். அது கணையும் வேலும் துணையுற மொய்த்தலின் சென்ற உயிரின் நின்ற யாக்கை. இருநிலந் தீண்டா அருநிலை வகையொடு இருபாற்பட்ட ஒப்பற்ற சிறப்பின்னயுடையது. பன்னிரண்டு தறைகளையுடையது. அவை தானையானை குதிரை என்ற நோனார் உட்கும் மூவகை நிலையும் வேன்மிகுதானை மொய்த்தவழி ஒருவன் தான் மீண்டெறிந்த தாரர் நிலை அன்றியும், இருவர் தலைவர் தபுதிப் பக்கமும், ஒருவன் ஒருவனை உடை படை புக்குக் கூழை தாங்கிய எருமையும், படையறுத்துப் பாழி கொள்ளும் ஏமத்தானும், களிறெறிந்தெதிர்ந்தோர் பாடும், களிற்றொடு பட்ட வேந்தனை அட்ட வேந்தன் வாளோர் ஆடும் அமலையும், வாள் வாய்த்து இருபெருவேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியாத் தொகை நிலைக் கண்ணும், செருவகத்து இறைவன் மாய்ந்தெனச் சினைஇ ஒருவன் மண்டிய நல்லிசை நிலையும், பல்படை ஒருவற் குடைதலின் மற்றவன் ஒள்வாள் வீசிய நூழிலும் உளப்படப் புல்லித் தோன்றும் பன்னிருதுறைகளாம்.

*புறப்பொருள் வெண்பா மாலை கூறும் துறைகள் இருபத்து நான்கு. அவை வருமாறு*

துன்னருங் கடும் போர்த்தும்பை தும்பை யரவம்
தன்னிகரில்லாத் தானை மறமே
யானை மறத்தோடு குதிரை மறமே
தார்நிலை தேர் மறம் பாணது பாட்டே
இருவரும் தபுநிலை எருமை மறமே
ஏம எருமை நூழில் என்றா
நூழிலாட்டே முன்றேர்க் குரவை
பின்றேர்க் குரவை பேய்க்குர வையே
களிற்றுடன் நிலையே ஒள்வா ளமலை
தானை நிலையே வெருவரு நிலையே
சிருங்கார நிலையே உவகைக் கலுழ்ச்சி
தன்னை வேட்டல் தொகை நிலை உளப்பட
நன்பொருள் தெரிந்தோர் நாலிரு மூன்றும்
வண்பூந் தும்பை வகையென மொழிப. (சூத்திரம் – 7)

***தும்பைத் திணைக் குரிய முதல் கரு உரிப்பொருள் :*** நெய்தலுக்குரிய முதற்பொருள் கருப்பொருள்களுள் ஏற்பன உரியவாகும். உரிப்பொருள் மைந்துபொருளாக வந்த வேந்தனைச் சென்று தலையழித்தலாம்.

***தும்பைத்திணை நெய்தல் திணைக்குப் புறனாயவாறு :*** மைந்து

பொருளாக எதிர் எதிரமைந்து இருசாராரும் வஞ்சியாது உடற்றும் தறுகண்மைப் போராகலின் இது பெருமணலுலகம் போலமைந்த பரந்துபட்ட களர் நிலத்தே நிகழ்தல் வழக்காதலானும், பெரும்பொழுது வரையறையின்மையானும் போரிற் புண்பட்டு உழந்தோரையும் மண்பட்டு மாய்ந்தோரையும் எண்ணி அவர்தம் கேளிர் இரங்குதற்குரிய பொழுது எற்பாடாக அமைதலானும், நெய்தலின்கண் தலைவி கடற்கானலையும் புள்ளினங்களையும் நோக்கிக் கையுற்று இரங்குதல் போலப் படைமறவர்தம் ஆற்றலும் அழிவும் சுட்டிக் கிளைஞரும் பிறரும் இரங்குதலானும் முதற்பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும் ஒருவாறு ஒத்தலின் தும்பை நெய்தலுக்குப் புறனாயிற்று என்க.

***தும்பையரவம் :*** (தும்பை–பு–வெ) வேந்தன் படைக்குத் தண்ணளி புரிவது. அஃதாவது,செல்வங்களை வழங்குதல்.

***துயரவற் குரைத்தல் :*** (இரு–பெரு–பு–வெ) மயில் போன்ற தலைவியை மாலைக் காலம் வருத்துதலைத் தோழி அவள் துன்பத்தினைத் தலைவனிடம் சொல்வது.

***துயிலெடைநிலை :*** (தொல்–புற–30 பாடாண்) சூதர் ஏத்திய துயிலெடைநிலை என்னும் தலைப்பிற்காண்க. (பாடாண்–பு–வெ) அடுதிறல் மன்னனை அருளதற்கு எழுந்தருள் வாயாக எனத் துயிலெழுப்புதல்.

***தூதிடையாடல் :*** (இலு–பெருந்–பு–வெ) மாலைக் காலம் தலைவியை வருத்துதலைத் தோழி நோக்கித் தலைவனிடத்தே தூது சென்று சொல்வது.

***தேர்மறம் :*** (தும்பை–பு–வெ) தும்பை மறவர் தம் தேர் பகைவரை வீழ்த்தி அவர்மேல் ஊர்ந்து செல்லும் எனத்தேரைச் சிறப்பித்துக் கூறுவது.

***தேர் முல்லை :*** (முல்–பொது–பு–வெ) பகைவரை உறவாக்கி மீண்ட மன்னவன் தேர்வரவைச் சொல்வது. தலைவன் தேர் எனினுமாம்.

***தேர் வென்றி :*** (ஒழிபு–பு–வெ) தலைவன் தேர் ஊர்ந்து சென்று பகைவரை வென்ற திறல் கூறுவது.

***தேரோர் களவழி :*** (தொல்–புற– 17 வாகை) பகை வென்று அவர்தம் பொருளைக் கவர்ந்து போர்க் களத்தின் கண்ணே வந்து பாடி மகிழ்விக்கும் பாணர் முதலானோர்க்கு அவற்றை வழங்கும் வழக்கு.

***தொகை நிலை :*** (தொல்–புற–11 – உழிஞை) அரணத்தை வென்ற உழிஞை மறவர்தம் வேந்தனைப் போற்றுதற்குக் குழுமும் நிலையும் அவனைப் பணிந்து நொச்சி மறவர் குழுமும் நிலையுமாம். தொகுப்பாக நிற்கும் நிலை தொகை நிலை. (உழிஞை–பு–வெ) எல்லா அரணிடத்துமுள்ள நொச்சி மன்னரும் மறவரும் உழிஞை மன்னனிடம் அடிபணிந்து நிற்றல் (தும்பை—பு–வெ) கேடில்லாத புகழை நிறுத்தி இருதிறப்படைகளும் ஒருங்கு மடிந்தது.

***தொட்ட காஞ்சி :*** (காஞ்சி–பு–வெ) போரிற்புண்பட்ட வீரனை மனைவி பாதுகாத்து நிற்குமிடத்துப் பேய்மகள் அப்புண்ணைத் தீண்டியது.

***தொடாக் காஞ்சி :*** (தொல்–புற–19 காஞ்சி) புண்பட்டுக் கிடந்த கணவனைக் காத்து நிற்கும் மனைவி அவனைப் பேய் தீண்டுதற்கு நெருங்குதலை விலக்கித்தானும் தொடுதலைத் தவிர்ந்திருக்கும் நிலை.

(காஞ்சி–பு–வெ) அடலஞ்சாமற் புண்பட்டுக்கிடக்கும் மறவனின் புண்ணைத் தொடுதற்கு அஞ்சிப் பேய் அவலித்து நீங்கியதைச் சொல்வது.

***தொல்லுயிர் வழங்கும் அவிப்பலி*** : (தொல்–புற–17 வாகை) தறுகண் ஆண்மையொடு பொருந்திப் பகைவர் நாணும் வண்ணம் உடம்பொடு உடன் தோன்றியதாகிய உயிரை வழங்கிய அவிப்பலி. ஆவிப்பலி என்பது அவிப்பலி எனக் குறியீட்டுச் சொல்லாக அமைந்தது.

***தொல்லெயிற் கிவர்தல் :*** (தொல்–புற–10 உழிஞை) மாற்றாரது தொன்னலம் மிக்க மதிலிடத்து ஏணி முதலியவற்றைச் சார்த்தி ஏறி அதனை அழிக்க முற்படுதல்.

***தோலின் பெருக்கம் :*** (தொல்–புற–10 – உழிஞை) மதிலின்கண் இவரும் மறவர் மதில் மேலோர் எய்யும் கணை முதலியவற்றைத் தடுத்தற் பொருட்டு ஏந்தும் கிடுகுகளின் பெருக்கம். தோல்–கேடயம்.

***தோலுழிஞை:*** (உழிஞை–பு–வெ) பகைவரை வெல்லும் புகழைத்தருமெனத்தம் கிடுகு படையைச் சிறப்பித்தது.

***தோற்றோர் தேய்வு :*** (தொல்–புற–7 வஞ்சித்திணை) வஞ்சிப் போரின் கண் தோல்வியுற்றாரது மெலிவினைப் பரிந்து கூறுதல்.

***நடுதல் :*** (தொல்–புற–5) மாய்ந்த மறவனின் பீடும் பெயரும் பொறித்த கல்லினை மேடையின் கண் எழுந்தருளச் செய்தல்.

***நடைமிகுத் தேத்திய குடை நிழல் மரபு :*** (தொல்–புற–30 – பாடாண்) கொற்றவனது தண்ணிய ஒழுக லாற்றினைக் குடையின் கண் ஏற்றிப் புகழ்ந்து கூறும் குடைநிலை வாழ்த்து என்னும் துறை.

***நடைவயிற் றோன்றிய இருவகை விடை :*** (தொல்–புற–30 பாடாண்) வள்ளன்மையுடைய தலைவன் பரிசில் நல்கப் பெற்றபின் அவ்வரிய பெரும் வளத்தினைப் பாராட்டி ஒழுகு மிடத்து நிகழும் இருவகை விடைகளும் இருவகை விடையாவன பரிசிலர் தாமே விடைகூறிச் செல்லலும் புரவலனிடம் விடை பெற்றுச் செல்லலும்.

***நயத்தல் :*** (கைக்–பு–வெ) இது பெண் பாற் கூற்று. திண்ணிய தோளையுடைய தலவனைக் கண்ட தலைவி தனது பெருவிருப்பத்தைப் கூறுவது.

***நயப்புற்றிரங்கல் :*** (கைக்–பு–வெ) இஃது ஆண்பாற் கூற்று தலைவியின் கூட்டத்தை விரும்பிய தலைவன் அவளை எய்துதல் அருமையான் அவளை மிகவும் புகழ்ந்து கூறுதல்.

***நல்லிசை வஞ்சி :*** (வஞ்சி–பு–வெ) பகைவரது வேற்றுப் புலம் அழிய விட்டவென்றி வேலினையுடையவனது வெற்றியை மிகுத்துக் கூறியது.

***நலம் பாராட்டல் :*** (கைக்–பு–வெ) தலைவன் தன் வருத்தம் தோன்றக் தலைவியின் மிக்க பேரழகினைப் பாராட்டுவது.

***நாடு வாழ்த்து :*** (பாடாண்–பு–வெ) மன்னவனது வளம் பொருந்திய நகரத்தின் பெருமையைக் கூறி வாழ்த்துவது.

***நாண் மங்கலம் :*** (பாடாண்–பு–வெ) நாள்மங்கலம் அறந்தரு செங்கோன்மையுடைய அருளை விரும்பிய மன்னவனது பிறந்த நாளின் நன்மைையைச் சொல்வது.

***நாண்முல்லை :*** (முல்–பொது–பு–வெ) கணவன் பிரிந்தானாகப் பிறர் நாணுமாறு தன்மனையிருந்து நாணே துணையாகத் தன்னைப் பாதுகாத்திருத்தல்.

***நாலிரு வழக்கிற்றாபதப்பக்கம் :*** (தொல்–புற–16 வாகை ) தாபதப்பக்கம் என்னும் தலைப்பிற் காண்க.

***நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும் :*** (தொல்–புற–30 பாடாண்) அசுவினி முதலிய நாளும், கதிரவன் முதலிய கோளும், புதுப்புள் வருதலும், பழம்புள் நீங்கலும் கூகை, கோட்டான் குழறலுமாகிய புட்களும், மைம்மீன் புகைதல் தென்றிசை மருங்கின் வெள்ளி யோடுதல் பற்றிய நிமித்தங்கள்.

***நில்லா உலகம் புல்லிய நெறித்து :*** (தொல்–புற–18 காஞ்சி) காஞ்சித்திணையாவது பல வழிகளானும் நிலைபேறில்லாத உலகத்தைப் பொருந்திய முறைமையினையுடையது.

***நீத்த கணவன் :*** (தொல் –புற–19 காஞ்சி) தன்னைப் பிரிந்து மாய்ந்த கணவன்.

***நீர்ப்படை :*** (தொல்–புற–5) மாய்ந்த மறவனின் பீடும் பெயரும் பொறித்த நடுகல்லினை நீர்ப்படுத்தல். (முழுக்குச்செய்தல்).

***நூழில் :*** (தொல்–புற–14 தும்பை) பல்படையும் தனக்கு உடைதலும் அவன் தன் ஒள்ளிய வாளால் கொன்று குவித்தல். நூழில் = குவித்தல். அஃது ஈண்டு கொன்று குவித்தலை உணர்த்தி நின்றது (தும்பை –பு–வெ) கழல் வேந்தர் படை விலக்கி அழல் வேல் திரித்து மறவன் ஆடுதலை விரும்பியது.

***நூழிலாட்டு :*** (தும்பை – புற–வெ) களங்கழுமிய படையிரிய உளங்கழிந்த வேலை மறவன் பறித்துப் பகை வர் வீழச் செலுத்தியது.

***குறிப்பு :*** புறப்பொருள் வெண்பாமாலையில் இவ்விரு துறைகளுக்கும் உரிய கொளுக்களும் வெண்பாக்களும் மாறிக்கிடக்கின்றன. ஏனினும் பதிப்பித்துள்ள நுலில் உள்ளவாறே ஈண்டு விளக்கந்தரப்பட்டுள்ளது.

***நெஞ்சொடு மெலிதல் :*** (கைக்–பு–வெ) பெண்பாற்கூற்று. அயலவர் கூறும்மிக்க அலருக்கு நாணித்தலைவி உள்ளம் வாடியிருத்தல்.

***நெடுமொழி கூறல் :*** (கரந்தை–பு–வெ) மன்னரின் மேம்பட்ட தனது வேந்தனிடம் ஒருமறவன் தன் மேம்பாட்டை உயர்த்திச் சொல்லியது.

*நெடுமொழி வஞ்சி :* (வஞ்சி–பு–வெ) வஞ்சி மறவன் மாற்றாரது படையை நெருங்கித் தன் பேராண்மையை உயர்த்திச் சொல்லியது.

*நெறியின் ஆற்றிய அறிவன் தேயம் :* (தொல்–புற–16 வாகை) நாள் கோள் ஞாலம் ஆகிய மூன்றானும் நிகழும் மூவகைக் காலங்களையும் நூலானும் நுண்ணறிவானும் அறிந்து செயலாற்றிய அறிவன் வாகையாகிய பகுதி.

*நொச்சி :* (தொல்–புற– 11 உழிஞை) அகத்தோன் வீழ்ந்த நொச்சி பகைவரான் முற்றப்பட்ட அரணத்தோன் அதனை தவிர்த்துக் கோடற்கு விரும்பிய மதிலகத்துப் போர். நொச்சி = மதில். அரணகத்தோர் சூடும் அடையாளப்பூவும் நொச்சியாகும்.

*நொச்சித் திணை :* (நொச்சி–பு–வெ) முற்றப்பட்ட அரணகத்தோர் செயற்பாட்டினை ஒருதிணையாகக் கொள்வார் ஐயனாரிதனார் "எயில் காத்தல் நொச்சி" என்பது இடைக்காலத்து நூலோர் கொள்கை. அது ஒன்பது துறைகளையுடையது அவை வருமாறு நுவலருங்காப்பின் நொச்சி, ஏனை மறனுடைப் பாசி, ஊர்ச்செரு செருவிடை வீழ்தல், பாசிமறன், எயிற்போர், எயில்தனை அழித்தல் அழிபடை தாங்கல், மகள் மறுத்து மொழிதல், என்பனவாம்.

*நோயின்றுய்த்தல் :* (தொல்–புற–3 வெட்சி) மாற்றாரது ஆனிரைகளை ஊறுபடாமற்கொண்டு செல்லுதல். சுரத்துய்த்தல் காண்க.

*நோனார் :* (தொல்–புற–14) ஆற்றாத பகைவர்.

*பகட்டினானும் மாவினானும் துகள் தீர் சிறப்பின் சான்றோர் பக்கம்* (தொல்–புற–17 வாகை) எருமையும், ஆனும், ஆனேறுமாகிய பகட்டினங்களானும் பரிமாவும் கரிமாவுமாகிய மாவினங்களானும் வரும் குற்றம் நீங்கிய செல்வத்தினை உடைய வேளாண் மாந்தரும் வாணிக மாந்தருமாகிய சான்றோர் பகுதியாக வரும் வாகை. (முல்–பொது–பு–வெ) பகடு = ஆனேறு. தன் மனைக் கிழவனை அவனது ஊக்கமும் தாளாண்மையும் பற்றி பகட்டுடன் உவமித்துத் தலைவி கூறுவது. இது வேளாளர்க்குரியது.

*பகல் முனிவுரைத்தல் :* (கைக்–பு–வெ) பெண்பாற் கூற்று தலைவனைப் பிரிந்து தனிமையுற்றிருக்கும் தலைவி துயரத்தொடு பகற் பொழுதை வெறுத்துக் கூறுவது.

*பட்ட வேந்தன் :* (தொல்–புற–14 தும்பை) மடிந்திறந்த மன்னன்

*படையறுத்துப் பாழி கொள்ளும் ஏமம் :* (தொல்–புற–14 தும்பை) படைக்கருவியை ஏந்தாமல் நீக்கி மெய்வலியாற் புரியும் மற்போராகிய துறை. ஏமம் = மயக்கம் இருவர்கலந்து புரியும் மற்போர்.

*படையியங்கரவம் :* (தொல்–புற–3 வெட்சி) வேந்தன் ஏவிய வழி நிரை கோடற் கெழுந்த மறவர்தம் இயக்கத்தான் நிகழும் ஆரவாரம்.

*படை வழக்கு :* (காஞ்சி–பு–வெ) மன்னவன் தம்மின் இனம் ஒத்த மறவர்கட்குப் படைக்கலன்களை வழங்குவது.

***பயந்தோர்ப் பழிச்சல் :*** (கைக்–பு–வெ) ஆண்பாற் கூற்று. கூடிமகிழ்ந்த தலைவன் தலைவியைப் பெற்றெடுத்தோர் நெடிது வாழ்வாராக எனக்கூறி அமையாது புகழ்வது.

***பரத்தைக் கூறல் :*** (இர–பெருந்–பு–வெ) மணங்கமழும் மலையையுடைய தலைவனது மாலை எமக்கு பெறுதல் எளிதெனப் பாங்கவர் கேட்பப் பரத்தை கூறுதல்.

***பரத்தையை ஏசல் :*** (பெருந்–பு–வெ) தலைவனொடு புனல்விளையாட்ட யரும் தலைவி பரத்தையை ஏசுதல்.

***பரத்தை வாயில் பாங்கி கொண்டுரைத்தல் :*** (இரு–பெருந்–பு–வெ) உமது இல்லத்திலிருந்து மடவார் சொன்ன சொற்கள் நீங்க. எமது வீட்டிற்குத் தேரும்பாகனும் தலைவனும் வரும் என்று கூறி இற்பரத்தைத் தோழிக்குச் சேரிப்பரத்தை கூறுவது.

***பரவலும் புகழ்ச்சியும் கருதிய பரங்கினும் :*** (தொல்–புற–22 பாடாண்) பாடாண்டிணை ஆதற்குரிய தலைமக்களது ஆளுமைப் பண்புகளைப் பரவலும் புகழ்ச்சியுமாகக் கருதிக் கூறுமிடத்து அவை பாடாண் பகுதிகளாகும்.

***பரிசில் கடைஇய கடைக் கூட்டுநிலை :*** (தொல்–புற–30 பாடாண்) கூத்தர் முதலானோர் பரிசிலர்க்கு வழங்கும் வள்ளியோனது நகர் வாயிலை அணுகித் தம் பரிசில் வேட்கையைப் புலப்படுத்தும் சொற்களை அவனிடத்துச் செலுத்தும் நிலை.

***பரிசில் நிலை :*** (பாடாண்–பு–வெ) பரிசில் நல்கிய புரவலன் மகிழ்ந்தானாகப் பின்னும் விடைபெறாமல் நிற்கும் பரிசிலர் நிலை.

***பரிசில் விடை*** (பாடாண்–பு–வெ) தன்னைப் புகழ்ந்து பரவிய இரவலர்க்குப் பரிசில் நல்கிப் புரவலன் விடை கொடுத்தது.

***பரிசிற்றுறை :*** (பாடாண்–பு–வெ) மண்காக்கும் அரசனிடத்து இரவலர்கள் தாம் விரும்பும் பரிசில் இவையன விளம்பியது.

***பருவம் மயங்கல் :*** (இரு–பெருந்–பு–வெ) பருவங்கண்டு வருந்திய தலைவியிடத்துத் தோழி இது உண்மையான பருவமன்று என்று கூறிப் படருழந்தது.

***பழிச்சினர் பணிதல் :*** (பாடாண்–பு–வெ) வேந்தனிடம் தாம் பயன் கொள்ளுதற் பொருட்டு வாழ்த்தி வணங்குதல்.

***பள்ளிமிசைத் தொடர்தல் :*** (பெருந்–பு–வெ) தலைவி தலைவன் உறக்கத்தை நீக்கித் தன் பள்ளியிடத்தே சேர்த்துப் பற்றியது.

***பாக்கத்து விரிச்சி :*** (தொல்–புற–3– வெட்சி) வெட்சி மறவர் தம் பாக்கத்திடத்துக் குழுமி மேற்செலவிற்கு நிமித்தமாகக் கேட்கும் நற்சொல்.

***பாசி நிலை :*** (தொல்–புற–11–உழிஞை) நீர்ச் செரு வீழ்ந்த பாசி இடை மதிலைச் சூழ்ந்து கிடக்கும் நீர்க் கிடங்கினைக் கடத்தற்கு முயலும் புறத்தோனும் அதனைத் தடுக்க முற்படும்அகத்தோனும் இகல்புரியும் நிலை நீரிடைப் பாசிபோல் விலகியும் நெருங்கியும்

உடற்றும் போர் பாசிநிலை எனப்பட்டது. (உழிஞை–பு–வெ) பகைவரது வலி கெட நீர்க்கிடங்காகிய அகழியின் கண் இருதிறத்துப் படைகளும் போரிடல்.

***பாசி மறன் :*** (தொல்–புற–11. உழிஞை) நீர்க்கிடங்கினைக் கடந்தேறிய மறவர்கள் இடைமதிலை வளைக்குங்கால் ஊரகத்துக் காவல் மறவர் எதிர்த்தும் புரியும் போர்.

***பாடகச் சீறடி பணிந்தபின் இரங்கல் :*** (பெருந் –பு–வெ) தலைவன் தலைவியின் ஊடலைத் தவிர்த்தற்காக அவள் சீறடியைப் பணிந்துபின் இரங்கியது.

***பாடல்வென்றி :*** (ஒழிபு–பு–வெ) இனிய யாழினை இசைத்துப் பாடினிவெண்டுறையும் செந்துறையும் விளங்கப் பாடியது.

***பாடாண்டிணை :*** (தொல்–புற–20–30) பாடாண்டிணைபற்றித் தொல்காப்பியம் அதன் இயல்புகளைப் பதினொரு நூற்பாக்களால் விளக்குகின்றது. அவை வருமாறு.

1. பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
   நாடுங்காலை நாலிரண் டுடைத்தே
2. அமரர் கண்முடியும் அறுவகையினும்
   புரைதீர் காமர் புல்லிய வகையினும்
   ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப.
3. வழக்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்
   பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்
   முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை
   வண்ணப் பகுதி வரைவின் றாங்கே.
4. காமப் பகுதி கடவுளும் வரையார்
   ஏனோர் மருங்கினும் என்மனார் புலவர்
5. குழவி மருங்கினும் கிழவதாகும்.
6. ஊரொடு தோற்றமும் உரித்தெனமொழிய
   வழக்கொடு சிவணிய வகைமையான
7. மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே.
8. கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
   வடு நீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
   கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே
9. கொற்றவள்ளை ஓரிடத்தான
10. கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும்
    அடுத்தூர்ந் தேத்திய இயன்மொழி வாழ்த்தும்
    சேய்வரல் வருத்தம் வீட வாயில்

காவலர்க் குரைத்த கடைநிலை யானும்
கண்படை கண்ணிய கண்படை நிலையும்
கபிலை கண்ணிய வேள்வி நிலையும்
வேலின் ஒக்கிய விளக்கு நிலையும்
வாயுறை வாழ்த்தும் செவியறி வுறாஉவும்
கைக்கிளை வகையொடு உளப்படத் தொகைஇத்
தொக்கநான்கும் உளவென மொழிப.

11. தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்
சிறந்த நாளிற் செற்றம் நீக்கிப்
பிறந்த நாள்வயின் பெருமங் கலமும்
மன்னெயில் அழித்த மண்ணுமங் கலமும்
பெற்ற பின்னரும் பெருவளன் ஏத்தி
நடைவயிற் றோன்றும் இருவகை விடையும்
அச்சமும் உவகையும் எச்சமின்றி
நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்
காலங் கண்ணிய ஓம்படை உளப்பட
ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பிற்
காலம் மூன்றொடு கண்ணிய வருமே

## *இனிப் புறப்பொருள் வெண்பாமாலை கூறும் பாடாண்டிணைத்துறைகள் வருமாறு.*

பாடாண் பாட்டே வாயில் நிலையே
கடவுள் வாழ்த்தோடு பூவை நிலையே
பரிசிற் றுறையே இயன்மொழி வாழ்த்தே
கண்படை நிலையே துயிலெடை நிலையே
மங்கல நிலையொடு விளக்கு நிலையே
கபிலை கண்ணிய புண்ணிய நிலையே
வேள்வி நிலையோடு வெள்ளி நிலையே
காடு வாழ்த்தொடு கிணையது நிலையே
களவழி வாழ்த்தே (சான்போர் ஏத்த)
வீற்றினி திருந்த பெருமங் கலமே
குடுமி களைந்த புகழ்சாற்று நிலையே

மணமங் கலமே பொலிவுமங் கலமே
நாண்மங் கலமே பரிசில் நிலையே
பரிசில் விடையே ஆள்வினை வேள்வி
பாணாற்றுப் படையே கூத்தராற்றுப் படையே
பொருநராற்றுப் படையே விறலியாற்றுப் படையே
வாயுறை வார்த்தே செவியறி வுறூஉக்
குடைமங் கலமொடு வாள்மங் கலமே
மண்ணுமங் கலமே ஓம்படை ஏனைப்
புறநிலை வாழ்த்தும் உளப்படத் தொகைஇ
அமரர்கண் முடியும் அறுவகை யாகிய
கொடிநிலை கந்தழி வள்ளி குணஞ்சால்
புலவரை அவர்வயின் புகழ்ந்தாற்றுப் படுத்தல்
புகழ்ந்தனர் பரவல் பழிச்சினர் பணிதல்
நிகழ்ந்த காமப் பகுதியுட் டோன்றிய
கைக்கிளை வகையும் பெருந்திணை வகையும்
நற்றுணி நவின்ற பாடாண் பாட்டும்
கடவுட் பக்கத்தும் ஏனோர் பக்கத்தும்
மடவரல் மகளிர் மகிழ்ந்த பக்கமும்
மாதர் மகிழ்ந்த குழவியும் ஊரின்
கண்ணே தோன்றிய காமப் பகுதியொடு
ஆங்க ஆறெண் பகுதிப் பொருளும்
பாங்குற உரைப்பது பாடாண் பாட்டே.

***பாடாண்டிணை கைக்கிளைக்குப் புறனாயவாறு :*** கைக்கிளை அகனைந்திணைகளின் பாங்காக அவற்றின்கண் நிகழுமாறு போல பாடாண்டிணையும் வெட்சி முதலாகக் காஞ்சி யீறாகிய புறத்திணை நிகழ்ச்சிகளை வாயிலாகக் கொண்டு தலை மக்களது ஆளுமைப் பண்புகளையும் சுட்டி ஒருவர் பெயர் விளங்க வந்த அக ஒழுகலாற்றுத் தலைமைக்களின் ஆளுமைப்பண்புகளையும் பற்றி நிகழ்தலான் பாடாண்டிணை கைக்கிளைத் திணைக்குப் புறனாயிற்றென்க.

***பாடாண் பாட்டு :*** (பாடாண்–பு–வெ) ஒளியும் ஆற்றலும் ஓம்பா ஈகையும் அளியும் என்றிவற்றை ஆய்ந்து பாராட்டிப் புகழ்வது.

***பாண்பாட்டு :*** (தும்பை–பு–வெ) செருக்களத்துக் களிற்றினை வென்று பின் மாய்ந்த மறவர்கட்குப் பாணர்கள் இறுதிக் கடனாற்றி விளரிப் பண்ணிசைத்து வருந்துவது.

***பாண் வரவுரைத்தல் :*** (இரு பெருந் – பு–வெ) பரத்தையிற் பிரிந்த தலைவன் தூது விட்ட பாணனின் வருகையைத் தோழி தலைவிக்குக் கூறுதல்.

***பாணாற்றுப்படை :*** (தொல்–புற–30 பாடாண்) புரவலனிடம் பரிசுபெற்று வரும் ஒருவன் எதிர்வரும் பாணனிடத்துத் தான் பெற்ற பெருவளத்தைக் காட்டி

அவ்வள்ளலிடத்துச்செல்லும் வழிகாட்டிச் செலுத்துவது (பாடாண்–பு–வெ) சேணோங்கிய வரயதரிற் பாணனை ஆற்றுப் படுத்தியது.

*பாதீடு :* (தொல்–புற–3) ஆனிரைகளைக் கவர்ந்து வந்த வெட்சியார்க்கு அவரவர் திறத்திற்கேற்ப மன்னவன் அவற்றைப் பகுந்தளித்தல் – பகுத்து இடுதல் = பாதீடு (வெட்சி–பு–வெ) கவர்கணைச் சுற்றம் கவர்ந்து வந்த ஆனிரைகளை அவரவர் வினைவயின் அறிந்து பகுத்தளித்தது.

*பார்ப்பன முல்லை :* (வாகை – பு– வெ) முரண்பட்ட மன்னர் இருவரிடையே தூது சென்று நடுவுநிலையோடு பேசி நான்மறை தேர்ந்த பார்ப்பனர் இருவர் பகையையும் தவிர்த்த வெற்றியைக் கூறுவது.

*பார்ப்பன வாகை :* (வாகை–பு–வெ) நான்மறைக் கேள்வி சான்ற பார்ப்பனர் வேள்வியாற் பெற்ற வெற்றியைச் சொல்வது.

*பால் முல்லை :* (முல்–பொது–பு–வெ) தலைவியைக் கூடி மகிழ்ந்த தலைவன் அதற்குக் காரணமாகிய விதியை ஏத்திக் கூறுவது. (பால்=ஊழ்வினை, விதி)

*பாலை நிலை :* (தொல்–புற–19 காஞ்சித்திணை) நல்லோள் கணவனொடு நனியழல் புகீஇச் சொல்லிடையிட்ட பாலை நிலையும் = கற்புடைய மனையாள் மாய்ந்த கணவனோடு மிக்கெரியும் ஈமத்தழலின்கண் புகுமிடத்து அதனை விலக்குவாரை நோக்கி உறழ்ந்து கூறும் நிலை.

*பிடி வென்றி :* (ஒழிபு–பு–வெ) ஆடல் மகள் ஒருத்தி பிடியைப் போல அசைந்து பெயர்ந்தாடும் கூத்தினது வெற்றியைச் சொல்வது. பிடியை ஊர்ந்து நடத்திச் செல்வது என்பாரும் உளர்.

*பிரிவிடையாற்றல் :* (பெருந்–பு–வெ) தலைவி தலைவனை நெகிழக்கண்டு வெறுத்து வருந்தி தலைவனுடைய பிரிவை ஆற்றியிருத்தல்.

*பிள்ளைத் தெளிவு :* (கரந்தை–பு–வெ) போரில் புண்பட்ட மறவன் துடிப்பறை ஆரவாரிக்கத் தான்பட்ட புண்ணை மகிழ்ந்து கூத்தாடுவது. கவந்த மாகி நிற்கும் மறவன் வாளைப் பிடுங்கிக் கொண்டு ஆடியது என்பது வெண்பாவின் கருத்து.

*பிள்ளை நிலை :* (தொல்–புற–5) வருதார் தாங்கல் வாள்வாய் வாய்த்துக் கவிழ்தல் என்னும் இரண்டும் பிள்ளை நிலை என்ப்படும் விளக்கம் அவ்வத்தலைப்பிற் காண்க.

*பிள்ளைப் பெயர்ச்சி :* (கரந்தை–பு–வெ) புள் நிமித்தத்தை போற்றாமல் வீறுகொண்டு மாற்றார் பூசலைத் தாங்கிய மறவனை மன்னன் பாராட்டித் தண்ணனி செய்தது.

*பிள்ளையாட்டு :* (தொல்–புற–5) வாள்மலைந்தெழுந்தோனை மகிழ்ந்து பறை தூங்க நாடவற் கருளியபிள்ளையாட்டு = பகைவரை வாளாற் பொருதழித்த பிள்ளையனை உவந்து வெற்றிப்பறை முழங்க வேந்தன் அவனுக்குத் தண்ணடை நல்கியது. ஆட்டுதல் = பாராட்டுதல் (கரந்–பு–வெ) பகைவரை வீழ்த்தி அவரது குடரை மாலையாகச் சூடிக்கொண்டு மறவன் தலைவேலைத் திரித்து ஆடிய கூத்து. ஆட்டு=ஆட்டம்.

***பிள்ளை வழக்கு :*** (வெட்சி–பு–வெ) புள் நிமித்தம் கண்டு கூறிய வனுக்கு வஞ்சியாது ஆனிரையை வழங்கி மகிழ்வது.

***பிழைத்தோர்த் தாங்குங்காவல் :*** (தொல்–புற–17 வாகை) அறிந்தும் அறியாமலும் தம்மைப் பிழைத்தோரைச் செறாது பொறுத்து அவர்க்குத் தம்மானும் பிறரானும் ஏதம் வாராமல் காக்கும் காவல்.

***பிறந்த நாள்வயின் பெருமங்கலம் :*** (தொல்–புற–30 பாடாண்) மாற்றாரை வெற்றிகொண்ட சிறந்த நாளின் கண் அம்மன்னரின் செற்றம் பற்றியவற்றைக் கூறாமல் விலக்கி அவர்தம் அருளாண்மைப் பண்புகளையே போற்றி அவர் பிறந்த நாளின் கண் புலவோர் புகழ்ந்தேந்தும் பெருமங்கலம் வாழ்த்து.

***பிறர் மனை துயின்றமை விறலி கூறல் :*** (இரு–பெருந்– பு–வெ) தலைவன் பரத்தையில்லத்தில் தங்கியிருந்த தன்மையை விறலி தலைவியிடத்துக் கூறுதல்.

***பின்றேர்க்குரவை :*** (தொல்–புற–17 வாகை) மன்னவரது வெற்றியைப் பொருந்திய தேரின்பின் பாணரும் கூத்தரும் விறலியரோடு கைபிணைத்தாடும் குரவையாடல். (தும்பை–பு–வெ) வீரக்கழலணிந்த மறவரொடு விறலியர் மன்னவன் தேரின் பின் கைபிணைத்தாடும் குரவைக் கூத்து. இது போர் மேற் செல்லுங்கால் ஆடும் குரவை (வாகை–பு–வெ) பெய்கழலான் தேரின்பின் மொய்வளை விறலியர் வயவரொடு தேரின்பின் ஆடும் குரவைக் கூத்து. இது வெற்றி பெற்று வரும் தேரின்பின் ஆடுங் கூத்து என்பார் உரையாசிரியர்.

***பின்னிலை முயறல் :*** (பெருந்–பு–வெ) காதலிதான் முன்பு தோற்ற அழகை மீண்டும் பெறல் விரும்பித் தலைவனிடம் இரந்து பின்னிற்கும் நிலை.

***புகழ்ந்தனர் பரவல் :*** (பாடாண்–பு–வெ) கிட்டுதற்கரிய தெய்வத் தான் இப்பதத்தை அடைய வேண்டிப் போற்றி வணங்குவது.

***புண் கிழித்து மடியும் மறன் :*** (தொல்–புற–19 வஞ்சி) தருகண்மை மிக்குத் தோன்றும் மறக்கூறுபாட்டினை எண்ணி உயிரை முடிக்க மாட்டாத விழுப் புண்ணினைப் பெரிதாக்கி இறந்துபடும் மறக்காஞ்சி.

***புண்ணொடு வருதல் :*** (கரந்–பு–வெ) வெட்சியாரொடு வென்று புண்பட்டு வரும் மறவனது சிறப்பினைக் கூறுவது.

***புண்ணோன் :*** (தொல்–புற–19 காஞ்சி) பேய்ப் பாதுகாத்துக் கொண்டிருக்கும் புண்பட்டுக் கிடக்கும் வீரன்.

***புணராவிரக்கம் :*** (கைக்–பு–வெ) தான் காட்சியிற் கண்ட மடந்தையைக் கூடப் பெறாத நிலையில் தலைவன் வருந்தும் நிலை.

***புரை தீர்காமம் புல்லிய வகை :*** (தொல்–புற–21 பாடாண்) பாடாண்டிணைப் பகுதிகளுள் ஒன்று. குற்றந்தீர்ந்த காமக் கூட்டம் பற்றி நிகழும் ஒழுகலாற்றின் பாலும் ஒருகூறு பாடாண்டிணையாகக் கூறுதற்கும் பொருந்தும்.

***புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கம் :*** (தொல்–புற–17 வாகை ) மண்ணக வாழ்வே பெரிதென அதனைத் தழுவாமல் இறப்பிற்கு அஞ்சாமல் வீறு கொண்டு புரியும் வல்லாண்மைக் கூறுபாடு.

***புலவிபொருளாகத் தோன்றிய பாடாண்பாட்டு :*** (பாடாண்–வெ) தலைவி ஊடல் காரணமாகத் தலைவனது மார்பினைப் புல்லேம் என்று கூறுதல்.

***புலவியுட் புலம்பல் :*** (பெருந்–பு–வெ) தலைவன் பணிமொழி கூறவும் புலவி தணியாத தலைவி அவன் அணிந்துள்ள மாலையை அறுத்துச் சினந்து தனிமையுற்று வருந்துதல்.

***புலவாற்றுப்படை :*** (பாடாண்–பு–வெ) வானத்துறையும் தெய்வத்தின் அருளைப் பெற அறிவுடையோனாகிய புலவனை ஆற்றுப்படுத்துவது.

***புலவரேத்தும் புத்தேள் நாடு :*** (காஞ்சி–பொது–பு–வெ) அவா நீங்கிப் புலன்களை வென்ற அறிவுடையோர் விரும்பும் தேவர் நாட்டை எடுத்துரைத்தல்.

***புறத்திணை :*** (தொல்–புற–1 வெட்சி) கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாயாக நிகழும் அகத்திணை ஏழற்கும் புறமாக நிகழும் வெட்சி முதலாகப் பாடாண் ஈறாக நிகழும் புறவொழுகலாறு.

***புறத்திணை ஒழிபு :*** (தொல்–புற–5) வெட்சி முதலாய ஐந்து திணைகளுக்கும் பொதுவான நிகழ்ச்சிகளும் ஒழுகலாறும் பற்றிக் கூறப்படும் இருபத்தொரு துறைகளும் புறத்திணை ஒழிபாம். அவை வருமாறு.

> "வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
> வெறி யாட்டயர்ந்த காந்தளும், உறுபகை
> வேந்திடைதெரிதல் வேண்டி ஏந்து புகழ்ப்
> போந்தை வேம்பே ஆர் எனவரூஉம்
> மாவருந் தானையர் மலைந்த பூவும்
> வாடா வள்ளி வயவ ரேத்திய
> ஓடாக் கழல்நிலை உளப்பட, ஓடா
> உடல் வேந் தடுக்கிய உன்ன நிலையும்
> மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
> தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்
> ஆரமர் ஓட்டலும் ஆபெயர்த்துத் தருதலும்
> சீர்சால் வேந்தன் சிறப்பெடுத்து ரைத்தலும்
> தலைத்தாள் நெடுமொழி த்ன்னொடு புணத்தலும்
> அனைக் குரி மரபினது கரந்தை : அன்றியும்
> வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தல் என்று
> இருவகைப்பட்ட பிள்ளை நிலையும்
> வாள் மலைந் தெழுந்தோனை மகிழ்ந்து பறை தூங்க
> நாடவற் கருளிய பிள்ளை யாட்டும்

காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்
சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்தல் என்று
இருமூன்று வகையிற் கல்லொடு புணரச்
சொல்லப்பட்ட எழுமூன்று துறைத் தே" (தொல்—புற—5)

என்பனவாகும். இவற்றுள் ஆரமர் ஒட்டல் முதலிய நான்கும் வெட்சியின் மறுதலைக் குரிய துறைகளாம். பிறவெல்லாம் பொதுத் துறைகளாம்.

## புறத்திணைக் குரியநாற் பாலாரின் அடையாளமும் வினை உரிமைகளும்

***அந்தணர்க்குரியவை :***

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங்காலை அந்தணர்க்குரிய (தொல்—மரபு—71)

அந்தணாளர்க்கு அரசு வரைவின்றே " 83

***அரசர்க்குரியவை :***

படையும் கொடியும் குடையும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவு கொள்செங்கோல் அரசர்க்குரிய " 72

அந்தணாளர்க் குரியவும் அரசர்க்கு
ஒன்றிய வரூஉம் பொருளுமா ருளவே " 73

பரிசில் பாடாண்டிணைத் துறைக் கிழமைப் பெயர்
நெடுந்தகை செம்மல் என்றிவை பிறவும்
பொருந்தச் சொல்லுதல் அவர்க்குரித் தன்றே (தொல்—மர—74)

***வணிகர்க்குரியவை :***

வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை ("78)
மெய்தெரிவகையின் எண்வகை உணவின்
செய்தியும் வரையார் அப்பாலான ( " 79 )

கண்ணியும் தாரும் எண்ணினர் அண்டே (" 80)

***வேளாளர்க்குரியவை :***

வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி (" 81)

வேந்துவிடு தொழிலிற் படையும் கண்ணியும்
வாய்ந்தனர் என்ப. அவர் பெறும் பொருளே ( " 82)

*நால்வர்க்கும் பொதுவானவை :*

ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும்
யாரும் சார்த்தி அவையவை பெறுமே
தலைமைக் குணச்சொலும் தத்தமக் குரிய
நிலைமைக் கேற்ப நிகழ்த்தும் என்ப. (" 76)

இடையிரு வகையோர் அல்லது நாடின்
படைவகை பெறாஅர் என்மனார் புலவர் (" 77)

வில்லும் வேலும் கழலும் கண்ணியும்
தாரும் மாலையும் தேரும் மாவும்
மன்பெறு மரபின் ஏனோர்க்கும் உரிய (" 84)

அன்னராயினும் இழிந்தோர்க்கில்லை (" 85)

***புறத்திறை :*** தொல் – புற– 3. வெட்சி) மாற்றாரது ஆனிரைகள் இருக்கும் தொழுவங்களைச்சுற்றி வெட்சி மறவர் தங்கியிருத்தல் (வெட்சி – பு– வெ) பகைவரது அரணையும் நுழைவாயில்களையும் வளைத்து யாரும் வெளியே சென்றுவிடாமல் வெட்சி மறவர் சூழ்ந்து தங்கியிருத்தல். (உழிஞை–பு–வெ) நொச்சியார் மதிலைச் சூழ்ந்து உழிஞை மறவர் முற்றுகையிட்டுத் தங்கியிருத்தல்.

***புறத்துழிஞை :*** (உழிஞை – பு– வெ) வானளாவிய காவற்காட்டினைக் கடந்து ஆழ்ந்தகிடங்கினைச் சூழ்ந்து அதன் புறத்தே தங்கியிருத்தல்.

***புறத்தோன் அணங்கியபக்கம் :*** (தொல்–புற–10. உழிஞை) அகத்தோன் செல்வவளத்தான் உளந்தளராதிருத்தலேயன்றி முற்றிய புறத்தோனைத் தனது படை வலிமையான் வருந்தச் செய்யும் உழிஞைப்பகுதி.

***புறத்தோன் வீழ்ந்த புதுமை :*** (தொல்–புற–11–உழிஞை) புறமதிலைக் கைப்பற்றிய புறத்தோன் நொச்சி மறவரை வென்று இடைமதிலை முற்றுதற்கு விரும்பிய புதியநிலை. புதுமை = மாற்றிவகுத்துக்கொண்ட போர் முறை.

***புறநிலை வாழ்த்து :*** (தொல்–புற–29– பாடாண்) வழிபடுதெய்வம் நின்னைப் புறங்காப்பப் பழி தீர்ந்த செல்வத்தொடு வழிவழி சிறந்து பொலிமின் என ஓம்படையாகப் பரவி வாழ்த்தும் வாழ்த்துரை. (பாடாண்.பு.வெ) வழிபடு தெய்வம் நிற்புறங்காப்ப வழிவழி சிறக்க என வாழ்த்துவது.

*புறப்பொருள் வெண்பாமாலை. பாயிரம் :*

மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்கால் முனிவரன்
தன்பால் தண்டமிழ் தாவின்றுணர்ந்த

துன்னரும் சீர்த்தித் தொல் காப்பியன் முதல்
பன்னிரு புலவரும்பா ங்குறப் பகர்ந்த
பன்னிரு படலமும் பாங்குறப் பகர்ந்தோன்
ஓங்கிய சிறப்பின் உலகமுழு தாண்ட
வாங்குவிற் நடக்கை வானவர் மருமான்
ஐயனாரிதன் அகலிடத்தவர்க்கு
மையறு புறப்பொருள் வழாலின்று விளங்க
வெண்பா மாலை எனப் பெயர் நிறீஇப்
பண்புற மொழிந்தனன் பான்மையின் தெரிந்தே

என்பதாகும். இந்நூலின் தொடக்கத்தின் கண் ஆனைமுகக் கடவுட்கும் சிவ பெருமானுக்கும் கடவுள் வாழ்த்துக் கூறப்பட்டுள்ளது.

புறமும் புறப்புறமும் (பு–வெ–சூ–19)
வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி
உட்கடை உழிஞை – நொச்சி தும்பை என்று
இத்திறம் ஏழும் புறமென மொழிப
வாகை பாடாண் பொது வியற்றிணை எனப்
போகிய மூன்றம் புறப்புறப்புறமாகும் (பு– வெ–19)

***புலனெறி சிறப்பு :*** (வெட்சி–பு–வெ) மாற்றாரது புலத்தின் நிலைமைகளை ஆராய்ந்து கண்டு வந்துரைத்தவர்க்கு ஆனிரைகளைப் பரிசளித்துச் சிறப்புச்செய்தது.
***பூக்கோள் நிலை :*** (காஞ்சி–பு–வெ) போரிடச்செல்லும் மறவர்கட்கு மன்னன் அடையாளப் பூவையும் போர்க்குரிய பூவையும் வழங்க வீரர்கள் அவற்றை ஏற்றுக்கொண்ட நிலை.

***பூசல் மயக்கு :*** (சிறப்–பொது–பு–வெ) போர்க்களத்தில் இளம் பாலகன் போரிட்டு மடிந்தானாக அவனது சுற்றம் வருந்தி அரற்றும் ஆரவாரத்தினைக்கூறல்

***பூசல் மாற்று :*** (தொல்–புற–3–வெட்சி) மறவர் மாற்றாரது ஆனிரைகளைக் கவர்ந்து வருங்கால் அவற்றை மீட்கக் கருதிக் கரந்தை சூடி வரும் மறவர்களைத் தடுத்து மாற்றுதல். (வெட்சி–பு–வெ) ஆனிரைகளை கவர்ந்துவரும் வெட்சி மறவர்கள் தம்மை எதிர்த்த கரந்தை மறவர்களைப் பூசலிட்டுப் பெயர்த்தது.

***பூவை நிலை :*** (தொல்–புற–5) மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின் தாவாவிழுப்புகழ் பூவை நிலை என்பார் ஆசிரியர். மாயோனதுதெய்வத் தன்மை பொருந்திய பெருஞ்சிறப்பினான் கெடாத புகழையுடைய காயாம்பூவினால் நிமித்தங் கோடலாகிய நிலை. நிமித்தம் – சகுனம். மன்னனை மாயோன் முதலாகிய தெய்வங்களோடு ஒப்பிட்டுக் கூறுதல் என்பார் நச்சினார்க்கினியர். புறநானூற்றுச் செய்யுள்கட்குத் துறை கூறுவோர் இதனைப் பாடாண்டிணைக்குரிய துறையாகக் கொள்வார். (பாடாண்–பு–வெ) மாயோனாகிய திருமாலின் நிறத்தொடு உவமித்துக் காயம்பூவினைப் புகழ்வது.

***பூவை வென்றி :*** (ஒழிபு—பு—வெ) நாகண வாய்ப்புள்ளாகிய பூவைகிளியை ஒப்பப் பேசும் வெற்றித்திறனைக் கூறுவது.

***பூழ்வென்றி :*** (ஒரிபு—பு—வெ) பூழ்—காடை என்னும் சிறுபறவை . . மந்திரம் ஓதிப் பூழ்ப்பறவைகளை ஒன்றோடொன்று பூசலிடச்செய்யுமிடத்து அத கொள்ளும் வெற்றியைப் பேசுவது.

***பெண்பாற்கிளவி :*** (இரு—பெருந்—பு—வெ) தன்னைநினையாது பிரிந்து சென்ற தலைவனை எண்ணித் தலைவி இவ்வூர் என் உளங்கவர்ந்த கள்வனைக் காணாது என்று கூறுவது.

***பெண்பாற் கூற்று :*** பெண்பாற் கைக்கிளை அது பத்துத் துறைகளைக் கொண்டது. அவை வருமாறு : காண்டல், நயத்தல், உட்கோள், மெலிதல், மெலிவொடு வைகல், காண்டல் வலித்தல், பகல் முனிவுரைத்தல், இரவு நீடு பருவரல், கனவினரற்றல், நெஞ்சொடு மெலிதல் என்பனவாகும்.

***பெருங்காஞ்சி :*** (காஞ்சி—பு—வெ) எதிர்வரும் படையினை எதிர்த்துத் தடுக்கும் திறல் வாய்ந்த மறவர்கள் தம்தம் ஆற்றலை சேனையினிடத்து வெளிப்படுத்துவது (காஞ்—பொதுவியல் — பு—வெ) மலையோங்கிய மாநிலத்து நிலையாமையின் முறைகளைக் கூறுவது. செல்வம் நிலையாமையைக் கூறுவது.

***பெருஞ்சோற்று நிலை :*** (தொல்—புற—7. வஞ்சித்திணை) அடுத்தூர்ந்து கொற்றங் கொண்ட மறவர்கட்கு வேந்தன் உணவுத்திரளையை வழங்குவது பெருஞ்சோறு = பெருமைக்குரிய உணவு. (வஞ்சி—பு—வெ) பகைவரை வென்று பெருமை சேர்ப்பார் இவர் வேந்தன் அவர்க்குப் பெருஞ்சோறு அளித்தது.

***பெருந்திணை :*** (பாடாண்—பு—வெ) தன் பால் காதல் செய்யாத ஆடவனை விரும்பி அவனைப்புல்லுதலை வேட்டு மிக்க இருட் காலத்து அவன் பாற் செல்லும் ஒருத்தியின் நிலையைச் சொல்வது.

***பெருந்திணைப் படலம் :*** (பு—வெ) அகப் புறத்திணையாகிய பெருந்திணைப்படலம் பெண்பாற்கூற்று இருபாற் பெருந்திணை என இருபகுதிகளாகக் கூறப்பட்டுள்ளது. பத்தொன்பதும் பதினேழுமாக முப்பத்தாறு துறைகளையுடையது. அவற்றுள் பெண்பாற்கூற்றுத் துறைகளை வருமாறு.

> வேட்கை முந்துறுத்தல் பின்னிலை முயறல்
> பிரிவிடை யாற்றல் வரவெதிர்ந்திரத்தல்
> வாராமைக் கழிதல் இரவுத் தலைச் சேறல்
> இல்லவை நகுதல் புலவியுட் புலம்பல்
> பொழுது கண் டிரங்கல் பரத்தையை ஏசல்
> கண்டுகண் சிவத்தல் காதலிற் களித்தல்
> கொண்டகம் புகுதல் கூட்டத்துக் குழைதல்
> ஊடலுள் நெகிழ்தல் உரைகேட்டு நயத்தல்

பாடகச் சீறடி பணிந்தபின் இரங்கல்
பள்ளிமிசைத் தொடர்தல் செல்கென விடுத்தல் என
ஒன்பதிரட்டி யோடு ஒன்றும் உளப்படப்
பெண்பாற் கூற்றுப் பெருந்திணைப்பால. (பு–வெ–சூ–16)

***இருபாற் பெருந்திணை :***

சீர்செல வழுங்கல் செழுமட லூர்தல்
தூதிடை யாடல் துயரவற் குரைத்தல்
கண்டுகை சோர்தல் பருவம் மயங்கல்
ஆண்பாற் கிளவி பெண்பாற் கிளவி
தேங்கமழ் கூந்தல் தெரிவை வெறியாட்டு
அரிவைக்கவள் துணைபாண் வர வுரைத்தல்
பரிபுறச் சீறடி பரத்தை கூறல்
விறலி கேட்பத் தோழிக்கு விளம்பல்
பரத்தை வாயில் பாங்கிகண் டுரைத்தல்
பிறர்மனைத் துயின்றமை விறலி கூறல்
குற்றிசை ஏனைக்குறுங்கலி உளப்பட
ஒத்த பண்பின் ஒன்று தலையிட்ட
ஈரெண் கிளவியும் பெருந்திணைப்பால . (பு–வெ–சூ–17)

***பெரும்படை :*** (தொல்–புற–5) மாய்த மறவனின் பீடும் பெயரும் எழுதிய கல்லினைப் பூசனை செய்து பெருமைப் படுத்தல். பெருமைப்படுத்தல் என்பது பெரும்படை என மருவியது. படைத்தல் = பலிதருதல். பலி=பூசனை.

***பெரு வஞ்சி :*** (வஞ்சி–பு–வெ) பொருந்தாதார் வள நாட்டைப் பின்னரும் வெகுண்டு நெருப்பிட்டுக் கொளுத்தியது.

***பேஎய் ஓம்பிய பேஎய்ப்பக்கம் :*** (தொல்–புற–19–காஞ்சி) ஏமச் சுற்றமின்றிப் புண்ணோர்ப் பேஎய் ஓம்பிய பேஎய்ப்பக்கம் = பேணுதற்குரிய சுற்றத்தாரைக் காணாமையான் புண்பட்டு வீழ்ந்தோனைப் பேஎயானது தானே பாதுகாத்த பேய்க் காஞ்சி என்னும் துறை.

***பேய்க்காஞ்சி :*** (காஞ்சி–பு–வெ) பிணம் பிறங்கிய களத்து வீழ்ந்த மறவனைப் பேய்மகள் மிகவும் அச்சுறுத்தியது.

***பேய்க்குரவை :*** (தும்பை–பு–வெ) மன்னவன் ஊர்ந்து வரும் தேரின் முன்னும் பின்னும் பேய்கள் குரவைக் கூத்தாடுவது.

***பேய்நிலை :*** (காஞ்சி–பு–வெ) போரில் வீழ்ந்த வேல் மறவனின் திறன் நோக்கிப் பேய்மகள் அவனை நீங்காமல் பாதுகாத்தது.

***போராண்பக்கம் :*** (தொல்–புற–7–வஞ்சி) பொருளின்றுய்த்த பேராண்பக்கம் = முனைமுகத்துப் போர்க்கருவிகள் யாது மின்றிப் பகைவர் அச்சமுற மறவர் வீறு செலுத்திய

தறுகண்மைப் பகுதியாகிய துறை.

*பேராண் வஞ்சி :* (வஞ்சி–பு–வெ) பகைவரது பெருஞ்செருமுனையை அழித்த தலைமையை உடைய வீரனுக்குப் பெரிதும் பரிசுகளை அளித்தது.

*பொதுவியற் படலம் :* (பு–வெ) இது, பொதுவியல், சிறப்பிற் பொதுவியல் காஞ்சிப்பொதுவியல், முல்லைப் பொதுவியல் என நான் பகுதிகளையுடையது.

***பொதுவியல் பன்னிரண்டு துறைகளையுடையது.***
***அவை வருமாறு :***

சீர்சால் போந்தை வேம்பொடு ஆரே
உன்ன நிலையே ஏழக நிலையே
கழல் நிலை ஏனைக் கற்காண்டல்லே
கற்கோள் நிலையே கல்நீர்ப்படுத்தல்
கல் நடுதல்லே கல் முறைப்பழிச்சல்
இற்கொண் டுபுகுதல் என்ற பன்னிரண்டும்
பொது வியற் பால என்மனார் புலவர் (பு–வெ–சூ–10)

***சிறப்பிற் பொது வியற் பாலன பதினொரு துறைகளையுடையது.***
***அவை வருமாறு :***

முதுபா லையே சுரநடை ஏனைத்
தபுதார நிலையே தாபத நிலையே
தலைப்பெயல் நிலையே பூசல் மயக்கே
மாலை நிலையே மூதானந்தம்
ஆனந் தம்மே ஆனந்தப் பையுள்
கையறுநிலை உளப்படப் பதினொன்றும்
மையறு சிறப்பிற் பொதுவியற் பால. (பு–வெ–சூ11)

***காஞ்சிப் பொது வியற் பாலன ஆறு துறைகளையுடையது. அவை வருமாறு :***

மூதுரை பொருந்திய முதுமொழிக் காஞ்சி
பெருங் காஞ் சியயே பொருள் மொழிக் காஞ்சி
மூதுகாஞ் சியொடு காடுவாழ்த் துளப்பட
மையறு சீர்த்தி வருமிரு மூன்றும்
பொய்தீர் காஞ்சிப் பொதுவியற் பால. (பு–வெ–சூ–12)

*முல்லைப்பொதுவியற் பாலன எட்டுத் துறைகளை யுடையது. அவைவருமாறு :*

சீர்சால் முல்லையொடு கார் முல்லை என்றா
தேர்முல்லையொடு நாண் முல்லை என்றா
வில்லாண் முல்லையொடு பகட்டு முல்லை என்றா
பான்முல் லையொடு கற்புமுல்லை என்றாங்கு
இருநால் முல்லையும் பொதுவியல் பால. (பு–வெ–சூ–13)

***பொருண் மொழிக்காஞ்சி :*** (காஞ்சி–பொது –பு–வெ) சடைமுடியுடைய முனிவர்கள் விரும்பித் தெளிந்த பொருள் மொழிகளைக் கூறுதல்.

***பொருநர் :*** (தொல்–புற–16.வாகை) பாலறி மரபின் பொருநர் தானை யானை குதிரை என்னும் மூவகைப்படையிடத்தும் வினைபுரியும் போர் மறவர்தம் வெற்றியாகிய பொருநவாகையும் பகைமையின்றித் தத்தம் ஆற்றலை உறழ்ந்து காணும் வகையாற்புரியும் கருவிப்போர் மற்போர் ஆகியவற்றின் மிகுதிப்பட்டு நிற்கும் பொருநவாகையுமாம்.

***பொருநவாகை :*** (தொல்–புற–16) பொருநர் என்னும் தலைப்பிற் கூறப்பெற்றவையே.

***பொருநராற்றுப்படை :*** (தொல்–புற–30–பாடாண்) வள்ளியோன் ஒருவன் பாற் பரிசு பெற்றுவரும் பொருநன் ஒருவன் எதிர்வரும் பொருநனை அவ்வள்ளியோன் பால் ஆற்றுப்படுத்தல் – (பாடாண்–பு–வெ) பெருநல்லான் உழையீரா கெனப் பொருநனை ஆற்றுப்படுத்தியது.

***பொருநவாகை :*** (வாகை–பு–வெ) கடல் போலும் தமது சேனையையும் பிறவற்றையும் எண்ணிப் பிறரை எள்ளுதலைச் செய்யற்க. என எடுத்துரைப்பது.

***பொருளொடுபுகறல் :*** (வாகை–பு–வெ) உலகப்பற்றினை நீக்கி மெய்ப் பொருளை நாடி உணர்க எனக் கூறுவது.

***பொருளொடு புணர்ந்த பக்கம் :*** (தொல்–புற–17. வாகை) அரசர் முதலானோர் தத்தம் நிலையிற் செம்மாந்திருத்தற்குரிய பொருளுடைமை பற்றிக் கருதும் வாகைப் பகுதி.

***பொலிவு மங்கலம் :*** (பாடாண்–பு–வெ) மன்னவன் உள்ளம் மகிழ அவன் மகன் பிறந்ததனைப் பலரும் கொண்டாடி மகிழ்தல்.

***பொழுது கண்டிரங்கல் :*** (பெருந்–பு–வெ) மாலைக் காலம் வந்தமை கண்டு தலைவனை எண்ணித் தலைவி வருந்துதல்.

***போந்தை :*** (தொல்–புற–5) பொதுவியல்–பு–வெ) சேரமன்னர்க்கு அடையாளப்பூவாகிய பனம்பூவை மறவர்கள் சூடுதல்.

***போர்க்களத்தொழிதல் :*** (கரந்தை–பு–வெ) பகைவரது படைக்கலங்களுக்குப் புறங்கொடாத வெற்றியினையுடைய வீரரைக் கூட்டிப் போரிட்டுத் தான் களத்திலே மாண்டது.

***போர் மலைதல் :*** (கரந்தை–பு–வெ) வெட்சி மறவர்களை நெருங்கி வளைத்து அவர் அஞ்சுமாறு தாக்கிப் போர் புரிந்தது.

***மகட்பாடஞ்சிய மகட்பால் :*** தொல்–புற–19. காஞ்சி) நிகர்த்து மேல் வந்த வேந்தனொடு முது குடி மகட்பாடஞ்சிய மகட்பால்=குலமுறை ஒவ்வாதேனும் மகட் கோடற்கு ஒத்து நடுவுநிலை இகந்து வந்த வேந்தனொடு தொல் குடிப்பிறந்ததன் மகளை அவன் மணப்பதற்கு அஞ்சிய மன்னவன் நிலைபற்றிய காஞ்சி.

***மகட்பாலிகல் :*** (உழிஞை–பு–வெ) உழிஞை மன்னன் நொச்சி மன்னவன் மகளிரைத் தருமாறு கேட்பதனால் நிகழும் பூசல்.

***மகட் பாற் காஞ்சி :*** (காஞ்சி–பு–வெ) பகைமன்னவன் மகளைத் தருக எனக் கேட்டு அவனொடுமாறு கொண்டது.

***மகள் மறுத்து மொழிதல் :*** (நொச்சி–பு–வெ) மதிலை முற்றும் உழிஞை மறவன் மகள் வேண்ட அதனை நொச்சி மறவன் மறுத்துரைத்தல்.

***மங்கலநிலை :*** (பாடாண்–பு–வெ) கங்குலில் உறங்கித்துயிலெழுந்த மன்னவன் முன்னின்று பாணர் முதலானோர் கூறும் மங்கலச் சிறப்பு.

***மண்ணுமங்கலம் :*** (உழிஞை–பு–வெ) பகைவரது மதிலாகிய கன்னியை வெற்றி கொண்டு மணந்தமையைக் கூறுவது. (பாடாண்–பு–வெ) மிகு புகழ் வாய்ந்த மன்னவன் மங்கல நீராடிய சிறப்பைச் சொல்வது.

***மணமங்கலம் :*** (பாடாண்–பு–வெ) பகையை வெல்லும் வலிய தோளையுடைய மன்னன். மாதரை மணம் புணர்ந்த நன்மையைக் கூறுவது.

***மதின்மிசைக் கிவர்தல் :*** (தொல்–புற–11. உழிஞை) இடைமதிலைக் கைப்பற்றிய மன்னன் பின்னர் பகைவன் உறையும் கோயிற் புரிசையை அகப்படுத்தற்குப் பரந்து செல்லுதல்.

***மல்வென்றி :*** (ஒழிபு–பு–வெ) மல்லர்தம் முன் மலைந்து பெரும் வெற்றி.

***மழபுல வஞ்சி :*** (வஞ்சி–பு–வெ) பகைவரது வேற்றுப்புலத்தைக் கொள்ளையிட்டு அகங்கள் பாழ்படக் கவர்த செயலைக் கூறுதல்.

***மறக் களவழி :*** (வாகை–பு–வெ) திண்ணிய புயத்தினையுடைய மன்னனை உழவனாக உருவகம் செய்து சிறப்பித்தல்.

***மறக் காஞ்சி :*** (காஞ்சி–பு–வெ) மன்னன் பகைவரது மாறுபாடு நீங்கத் தன் மறத் தொழிலைச் செலுத்தியது. (2) மறத்தொழிலையுடைய மறவன் பகைவரது மாறுபாட்டிற்குப் பொறானாகிப் பகைவரது வேல்பட்ட புண்ணினைப் பெரிதாக்கி மடியினும் மறக் காஞ்சியாகும்.

***மறமுல்லை :*** (வாகை–பு–வெ) வெள்வாள் வேந்தன் வேண்டிய பொருளைத் தரவும் அதனைக் கொள்ளாமல் தனது மனக் கொதிப்பைக் கூறல்.

***மறனுடைப்பாசி :*** (நொச்சி–பு–வெ) மறமிக்க சேனையை உடைய மறவேந்தர் மேல்வந்த தூசிப் படையைத் தடுத்து வீரசுவர்க்கம் எய்தியது.

***மறுவில் செய்தி மூவகைக் காலமும் :*** (தொல்–புற–16. வாகை) குறைபடாத செயற்பாடுடைய நாள், கோள், ஞாலமாகிய இம்மூன்றானும் நிகழும் மூவகைக்காலமும். அவையாவன, சிறுபொழுதும், பெரும்பொழுதும், ஆண்டுகளுமாகிய காலங்கள்.

***மன்னெயில் அழித்த மண்ணுமங்கலம் :*** (தொல்–புற–30. பாடாண்) பகைவருடைய நிலைபெற்ற அரணத்தை அழித்துக் கழுதை ஏர்பூட்டி உழுது வெள்வரகு வித்திப் பாழ்செய்து வீறுபெற்ற அந்நாளினைப்பற்றிப் புரியும் விழாவாகிய மண்ணுமங்கலம்.

***மன்னைக் காஞ்சி :*** (காஞ்–பு–வெ) மண்ணகம் மருளப் பெருவீரனும் வள்ளியோனுமாக இருந்த மன்னவன் மாய்ந்தானாக அவன் பெருமையைச் சொல்லிப் புலவோரும் மற்றையோரும் வருந்தியது. (மன் என்னும் சொல் பயின்றுவரும்) இன்னன் என்றிரங்கிய மன்னை என்னும் தலைப்புக் காண்க.

***மாணார்ச் சுட்டிய வாள் மங்கலம் :*** (தொல்–புற–30.பாடாண்) பகைவர் தோல்வியுறுதலைக் கருதி மன்னனும் மறவரும் ஏந்திய வாட்படையை ஏத்திப் புகழ்தல்.

***மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம் ஆய்ந்த பூசல் மயக்கம் :*** (தொல்–புற–19. காஞ்சி) மாய்ந்துகிடந்த செம்மலோனைத் துயரத்தோடு சூழ்ந்த சுற்றத்தார் வாய்விட்டு அரற்றாமல் நுணுகிய குரலோடு நொந்து வருந்திய பூசல் மயக்கம் என்னும் துறை. (பூசல்=புர்சல் (புரைச்சொல்) என்பதன் மருஉ)

***மாராயம் பெற்ற நெடுமொழி :*** (தொல்–புற–7 . வஞ்சி) வேந்தன் மாராயம் என்னும் விருந்து பெற்றமையால் வீறுகொண்ட மறவர்தம் தறுகண்மை தோன்றக் கூறும் மீக்கூற்று மொழி.

***மாராயவஞ்சி :*** (வஞ்சி–பு–வெ) மறவேந்தனால் மாராயம் என்னும் சிறப்புப்பெற்ற மறவர்தம் போரினைபற்றிக் கூறுவது.

***மாலைநிலை :*** (சிறப்–பொதுவி–பு–வெ) கதிர் வேற்கணவனொடுகனையெரியில் மூழ்கி மாய்தற் பொருட்டு மனைவி மாலைக் காலத்தில் நின்றது.

***மாவருந்தானையர் மலைந்தபூ :*** (தொல்–புற–5) பரியும் கரியும் ஊர்ந்து போர் செய்ய வரும் படைவீரர்கள் அணியும் போர்ப் பூவும் அடையாளப் பூவும். அடையாளப்பூ, போந்தை, வேம்பு, ஆர் என்பனவாம் ஆர்=ஆத்தி.

***மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமை*** (தொல்–புற–19–காஞ்சி) எவ்வகையானும் மாற்றுதற்கரிய கூற்றத்தின் இயல்பினை எடுத்துக் கூறும் பெருங்காஞ்சி என்னும் துறை. கூற்றம்=யமன்.

***முது வுழிஞை :*** (உழிஞை–பு–வெ) பகைவரது காவற் காடாகிய அரணினைக் கைக்கொள்ள இரைகண்டு பாயும் பறவையை ஒப்பப் பாய்ந்து குதித்தல். (2) செருமதிலோர் சிறப்பினை எடுத்துக் கூறினும் அத்துறையாகும்.

*முதுகாஞ்சி :* (காஞ்சி—பொது—பு—வெ) தலைவருபொருளைத் தக்காங்கு உணர்த்தி நிலைநில்லாமயை நெறிப்பட எடுத்துரைத்தல்.

*முதுபாலை :* (சிறப்—பொது—பு—வெ) கொடிய சுரத்தினிடத்துத் தன் கணவனை இழந்த மனைவி தனித்த வருந்தியது.

*முதுமொழிக்காஞ்சி :* (காஞ்—பொது—பு—வெ) பலராற் போற்றப் பெறும் பேரறிவுடையோர் முடிந்த பொருளாகிய அறம்பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள்களை விளக்கிக் கூறுதல்.

*முதுமொழி வஞ்சி :* (வஞ்சி—பு—வெ) தொன்மையான வரலாறுடைய மறக்குடியின் முன்னோனது சிறப்பைக் கூறுவது.

*முரச உழிஞை :* (உழிஞை—பு—வெ) பொன்னாற் செய்த உழிஞையைச் சூடி ஆடுவெட்டும் பலியை உடைய திண்ணிய முரசினது சிறப்பைக் கூறுவது.

*முரச வாகை :* (வாகை—பு—வெ) அரசனது பெரிய மாளிகையையிடத்து பலியைப் பெறும் முரசினையுடைய தன்மையைக் கூறுவது.

*முல்லை :* (முல்—பொது—பு—வெ) தடவரை மார்பன் தன்னைப் பொருந்திய அன்பினையுடைய தலைவியைக் கூடி மகிழ்ந்த நிலையை உரைத்தது.

*முல்லைப் பொதுவியற் பால :* பொதுவியல் வகையுள் ஒன்று இதுஎட்டுத் துறைகளையுடையது. அவையாவன :— சீர்சால் முல்லையொடு கார் முல்லை தேர்முல்லை, நாண்முல்லை, இல்லாண்முல்லை, பகட்டுமுல்லை, பால்முல்லை, கற்புமுல்லை என்பனவாம்.

*முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும் :* (தொல்—புற—8. உழிஞை) முழுமுதல் அரணம் தலையாய அரண் அரணுக்குக் கூறப்பெற்ற இலக்கணமெல்லாம் குறைவின்றி உடையது என்பார் இளம்பூரணர்.

முதலரணாவது மலையும், காடும், நீருமல்லாத அகநாட்டுச் செய்த அருமதில், அது வஞ்சனை பலவும் வாய்த்துத் தோட்டிமுள் முதலியவை பதித்த காவற் காடுபுறஞ்சூழ்ந்து அதனுள்ளே இடங்கா முதலாய உள்ளுடைத்தாகிய கிடங்கு சூழ்ந்து யவனர் இயற்றிய பல பொறிகளும் ஏனைய பொறிகளும் பதணமும் ஏப்புழையும் ஞாயிறும் ஏனைய பிறவும் அமைந்து எழுவும் சீப்பும் முதலியனவற்றான் வழுவின்றி அமைந்த வாயிற் கோபுரமும் பிற எந்திரங்களும் பொருந்த இயற்றப்பட்டதாகும், இனிமலையரணும் நில அரணும் சென்று சூழ்ந்து நேர்தலில்லா சூரதர் அமைந்தனவும் இடத்தியற்றிய மதில் போல அடிச்சிலம்பின் அரணமைந்தனவும் மீதிருந்து கணைசொரியும் இடமும் பிற எந்திரங்களு அமைந்தனவாம் என்பார் நச்சினார்க்கினியர்.

அத்தகைய முழு முதலரணத்தைச் சூழ்ந்து அழித்தற்குப் புறத்தோன் முற்றுதலும், கைக்கொள்ளுதலும் அவ்வாறே அக்த்தோன் புறத்தோனைத் தடுத்துக் காத்தலும் கோடலுமாம்.

*முற்றியமுதிர்வு :* (தொல்—புற—11.) உழிஞை அரணத்தை முற்றிய உழிஞையோன்

தன் மறவரைச் செலுத்திப் புறமதிலைச் சுற்றிப்புரிந்த போர் எதிர்ப் போரின்றியொழிய வென்று கைப்பற்றியபின் அதனைக் கடந்து செல்லற்கு முற்றிய முதிர்ந்த போர்ச்செயல்.

***முற்றுமுதிர்வு :*** (உழிஞை–பு–வெ) அகத்தோன் உள்ளிருந்து காலை முரசத்தை ஒலித்தலான் புறத்தோன் மிகச் சினந்து தன் மறவர்களை ஏவுதல்.

***முற்றுழிஞை :*** (உழிஞை–பு–வெ) ஆடியல் அவிர்சடையுடைய சிவபெருமான் முப்புரத்தை வென்றழிக்கச் சூடிய உழிஞைப்பூவினைச் சிறப்பித்தது.

***முன்றேர்க்குரவை :*** (தொல்–புற–17. வாகை) தேரேறிவந்த பகைவர் படைஞரைப் பொருது வென்று வரும் பேரரசனின் தேரின்முன் அவன்தானை மறவரும் கூத்தரும் கைபிணைந்தியற்றும் குரவையாடல் (தும்பை–பு–வெ) வென்றுவரும் வேந்தனத தேரின் முன் அவனது தானை மறவர் குரவைக் கூத்தாடியது. (வாகை–பு–வெ) பகையை வென்று வரும் வேந்தனது தேரின் முன் பேய்கள் குரவை கூத்தாடியது.

***முன்னோர் கூறிய குறிப்பினும் :*** (தொல்–புற–22. பாடாண்) அறநெறி முறையாக வண்ணித்துக் கூறும் வண்ணப்பகுதியாகக் கூறப்படும்.

***முனைகடி முன்னிருப்பு :*** (காஞ்சி–பு–வெ) வேந்தர்களை வெகுளச்செய்து அவர்களை முன்னெதிர்த்துப் பொருது போர்க்களத் தினின்று ஓடச் செய்தது.

***மூதானந்தம் :*** (தொல்–புற–19. காஞ்சி) கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச் செல்வோர் செப்பிய மூதானந்தம் : மாய்ந்து பட்டகணவனொடு ஒருயிராக இயைந்த மனைவி தானும் தன் வாழ்நாளை முடித்துக் கொண்ட பெருஞ்செலவைக் கண்டு அவ்வழிச்செல்வோர் இரங்கிக் கூறும் மூதானந்தம். ஆனந்தம்=சாக்காடு. (சிறப்–பொது–பு–வெ) கயலேர்கண்ணி கணவனொடு முடியக் கண்டு அவ்வழிச்செல்வோர் வியந்து கூறுவது.

***மூதின் முல்லை :*** (வாகை–பு–வெ) மறக்குடியிற் பிறந்த ஆடவர்தம் மறச்சிறப்பைக் கூறுதலேயன்றி அக்குடியிற் பிறந்த மகளிர் தம் மறத்தையும் சினத்தையும் எடுத்துக் கூறுவது.

***மறுவில் செய்தி மூவகைக் காலம் :*** (தொல்–புற–16. வாகை) குறைபடாத செயற்பாடுடைய நாள், கோள், ஞாலம் இம்மூன்றானும் நிகழும் மூவகைக்காலம் காலமென்பது புவியினது சுழற்சியும் கோள்களின் செலவும் நாள் மீன்களின் திரிவும் பற்றி நிகழ்வதாகலின் மூவகைக்காலம் எனப்பட்டது.

***மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே :*** (தொல்–புற–26. பாடாண்) புரைதீர் காமப் பகுதி பற்றிக் கடவுளரையும் கடவுளொப்பாரையும் புகழ்தலும் பரவலுமாகக் கூறுதற்கண் அவர்தம் ஊரும், ஊர்தி முதலாயினவும் பற்றி அவை தோன்றக் கூறுதலும் வழக்குநெறியானே சுட்டி ஒருவர் பெயர் கூறுதற்கண் மரபாக வைத்தனர் நூலோர். இளம்பூரனார் முதலானோர் வேறுபொருள் கூறுவர்.

***மெலிதல் :*** (கைக் –பு–வெ) அயலார் கூறும் அலர் மொழிகளைக் கேட்டுத் தலைவி

நாணமுற்று உளம்மெலிந்து வருந்துதல்.

***மெலிவொடு வைகல் :*** (கைக்–பு–வெ) தலைவனை நினைந்து அழகு கெட்டுத் தலைவி உளமெலிந்து ஆற்றியிருக்கும் நிலையைக் கூறுவது.

***மேவற்றாகும் :*** (தொல்–புற–12. தும்பை) தனது வலிமையைக் காட்டி நிறுவுதலாகிய பொருள். மைந்து=வலிமை.

***யாழ்வென்றி :*** (ஒழிபு–பு–வெ) யாழிசைத் துப்பாடுதலாகிய வெற்றி.

***யானை கைக்கோள் :*** (உழிஞை–பு–வெ)உழிஞை மறவர் பகைவரது மதிலைவென்று அவர் யானைகளைக் கைப்பற்றியது.

***யானை நிலை :*** (தொல்–புற–14. தும்பை) போரில் இருதிறத்து யானைப்படைகளும் உடற்றும் போர்நிலையைக் கூறுவது.

***யானை மறம் :*** (தும்பை–பு–வெ) வேந்தனின் யானைப்படையினர் மறச்செயலைக் கூறுவது.

***யானை வென்றி :*** (ஒழிபு–பு–வெ) பகைவரைக் கோட்டாற் குத்தி வென்ற யானையது வெற்றியைக் கூறுவது.

***வஞ்சித்திணை :*** (தொல்–புற–6) மண்ணசையாற்றனது நிலத்தைக் கைப்பற்றிய மன்னனை எதிர்த்து அவன் நாட்டிற்படையெடுத்துச் சென்று புரியும் போர். தொல்காப்பியர் இருதிறத்தாரையும் வஞ்சித்திணையுள் அடங்கிக் கூறுவார் புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் போர் மேற்செல்லல் வஞ்சித் திணை என்றும் அவரை எதிர்த்தல் காஞ்சித்திணையென்றும் கூறுவார்.

> எஞ்சாமண்ணசை வேந்தனை வேந்தன்
> அஞ்சுதகத் தலைச்சென்று அடல் குறித்தன்றே. (தொல்–புற–6)

**தொல்காப்பிய வஞ்சித்திணை பதின்மூன்று துறைகளையுடையது. அவை,**

> இயங்குபடை யரவம் எரிபரந் தெடுத்தல்
> வயங்கல் எய்திய பெருமை யானும்
> கொடுத்தல் எய்திய கொடைமையானும்
> அடுத்தூர்ந் தட்ட கொற்றத் தானும்
> மாராயம் பெற்ற நெடு மொழியானும்
> பொருளின்றுயத்த பேராண் பக்கமும்
> வருவிசைப் புனலைக் கற்சிறை போல
> ஒருவன் தாங்கிய பெருமை யானும்
> பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலையும்
> வென்றோர் விளக்கமும் தோற்றோர் தேய்வும்
> குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்
> அழிபடை தட்டோர் தழிஞ்சியொடு தொகைஇக்
> கழிபெருஞ் சிறப்பிற் றுறை பதின் மூன்றே. (தொல்–புற–7)

புறப்பொருள் வெண்பாமாலை வஞ்சித்திணை இருபத்தொரு துறைகளையுடையது. அவைவருமாறு :

> வாடா வஞ்சி வஞ்சி யரவம்
> கூடார்ப் பிணிக்கும் குடைநிலை வாள்நிலை
> கொற்றவை நிலையே கொற்ற வஞ்சி
> குற்றமில் சிறப்பிற் கொற்ற வள்ளை
> பேராண் வஞ்சி மாராய வஞ்சி
> நெடுமொழி வஞ்சி முது மொழி வஞ்சி
> உழுபுல வஞ்சி மழபுல வஞ்சி
> கொடையின் வஞ்சி குறுவஞ் சிய்யே
> ஒருதனி நிலையோடு தழிஞ்சி பாசறை
> பெருவஞ்சிய்யே பெருஞ்சோற்று நிலையோடு
> நல்லிசை வஞ்சியென நாட்டினர் தொகுத்த
> எஞ்சாச் சீர்த்தி இருபத்தொன்றும்
> வஞ்சியும் வஞ்சித் துறையு மாகும்.

இவற்றிற்குரிய விளக்கங்களை அவ்வத்தலைப்பிற் கண்டுகொள்க.

***வஞ்சித்திணைமுல்லைத்திணைக்குப் புறனயாவாறு :*** – தன் மண்ணை நச்சிய வேந்தனை வென்றடக்கும் கடமையை மேற்கொண்டு தன் தலைவியைப்பிரிந்து சென்று பாசறைக் கண் இருத்தல் வேண்டலானும் பாசறை அமைப்பதற்கு ஏற்புடைய நிலம் முல்லை நிலமாதலானும் அந்நிலவளம் செழித்தற்குரிய முதற்பொருளும் கருப் பொருளும் ஒத்து அமைதலானும் தலைவி ஆற்றியிருத்தற்குக் காரணமாக நிகழும் வஞ்சியொழுக்கம் முல்லைத்திணைக்குப் புறனாயிற்று. வஞ்சி வேந்தனை முல்லைத்தார் மன்னன் எனச் சிறப்பித்துக் கூறுவார் ஐயனாரிதனார்.

***வஞ்சித்திணைக்குரிய முதல் கரு உரிப்பொருள்கள் :*** – காடும் காடுசார்ந்த நிலமும் கார் காலமும் மாலையும் முல்லை நிலத்திற்குரிய கருப்பொருள்களும் தலைவியைப் பிரிந்து ஆற்றியிருத்தலுமாம்.

***வஞ்சியரவம் :*** (வஞ்சி–பு–வெ) வள்வார் முரசமொடு வயக்களிறுகள் முழங்க ஒள்ளிய வாட்படை வீரர்கள் ஆரவாரித்துப் புறப்படுதல்.

***வஞ்சினக் காஞ்சி :*** (தொல்–புற–19–காஞ்சி) இன்னதொன்றினைச் செய்யாமற்பிழைபடுவேனாயின் யான் இந்நிலையினனாகக் கடவேன் எனச் சூளுரைத்தல். (காஞ்சி–பு–வெ) வெஞ்சின வேந்தன் பகைவரை வென்று பணியச் செய்ய இவ்வாறு செயல் புரிவேன் எனச் சூள் உரைத்தல்.

***வடு நீங்கு சிறப்பின் முதலான மூன்று :*** (தொல்–புற–27.பாடாண்) கொடிநிலை, கந்தழி, வள்ளி என்னும் மூன்றுமாம் அவை கடவுள் வாழ்த்தொடு கருதத் தக்கனவாக வரும்.

***வண்புகழ்க் கொடைமை :*** (தொல்—புற—17. வாகை) இடையீடில்லாத வளவிய புகழைப்பயக்கும் கொடைத்தன்மையால் எய்தும் வாகை.

***வயங்கல் எய்திய பெருமை :*** (தொல்—புற—7—வஞ்சி) எரிபரந்தெடுத்துப் பகைவரை அஞ்சச் செய்த படைமறவனின் வினைவிளக்கத்தால் வேந்தன் எய்தி நிற்கும் பெருமை.

***வரவெதிர்ந்திருத்தல் :*** (பெருந்—பு—வெ) தலைவி தலைவனது வருகையை எதிர்நோக்கியிருத்தல். கூட்டத்தை விரும்பி எதிர் நோக்குதல்.

***வருசிறைப்புனலைக் கற்சிறை போல ஒருவன் தாங்கிய பெருமை*** (தொல்—புற—7.வஞ்சி) விசையொடு பெருகிவரும் கடும்புனலைக் கல்லாகிய அணை தடுத்து நிறுத்துமாறு போலத் தன் மேற் கடுகித் தொகையாகவரும் பகை மறவர்களைத் தான் ஒருவனே தடுத்து நிறுத்தும் பெருமிதம்.

***வருதார் தாங்கல் :*** (தொல்—புற—5) இருவகைப்பட்டபிள்ளை நிலைகளுள் ஒன்று. உடன்று மேல்வரும் கொடிப்படையினைத்தான் தனித்து நின்று தடுத்துப் போரிடும் செயல்.

***வருபகை பேணார் ஆரெயில் :*** (தொல்—புற—10. உழிஞை) போர் மேற் கொண்டுவரும் உழிஞை மறவர்களை ஒரு பொருளாகக் கருதாமல் இகழ்ந்திருத்தற்குரியதாகப் பொறி முதலியவற்றான் நிறைந்துள்ள மதிலரண்.

***வள்ளி :*** (தொல்—புற—27. பாடாண்) வான் மாரியாகி வள்ளி. இது. கடவுள் வாழ்த்தொடுவரும் (பாடாண்—புற—வெ) வள்ளி என்னும் கூத்து. இது முருகனை வேண்டி மகளிர் ஆடும் வெறியாட்டு.

***வாகைத்திணை :*** (தொல்—புற—15) குலமும் குடியும் பற்றிய மரபானும் அவரவர் மேற்கொண்ட பணிகளின் நிலைகளானும் அமைந்த வருத்தமில்லாத ஒழுகலாறுகளுள் தமக்குரியவாக வகைபட நின்ற செயற்கூறுகளை அவை விளக்கமுறத் தம் அறிவாற்றல்களான் பிறரினும் மேற்படச் செய்து விளங்குதல் வாகை என்னும் திணையாகும். அது தொகையால் எழும் பிற துறைகளால் பதினெட்டுமாகவரும். அவை வருமாறு :

> வாகை தானே பாலையது புறனே
> தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
> பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப. (தொல்—புற—15)

> அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
> ஐவகை மரபின் அரசர் பக்கமும்
> இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்
> மறுவில் செய்தி மூவகைக் காலமும்,
> நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்
> நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்

பாலறி மரபிற் பொருநர் கண்ணும்
மனைநிலை வகையொடு ஆங்கொழு வகையான்
தொகைநிலை பெற்றது. என்மனார் புலவர். (தொல்—புற—16)

கூதிர் வேனில் என்றிரு பாசறைக்
காதலின் ஒன்றிக் கண்ணிய வகையினும்
ஏரோர் களவழி யன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும், தேரோர்
வென்ற கோமான் முன்றேர்க் குரவையும்
ஒன்றிய மரபின் பின்றேர்க் குரவையும்
பெரும்பகை தாங்கும் வேலினானும்
அரும்பகை தாங்கும் ஆற்ற லானும்
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்
ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்ந்து
தொல்லுயிர் வழங்கிய அவிப் பலியானும்
பகட்டினானும் மாவினானும்
துகள்தபு சிறப்பின் சான்றோர்ப் பக்கமும்
கட்டில் நித்த பாலின் கண்ணும்
எட்டுவகை நுதலிய அவையகத் தானும்
கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்
இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்
பிழைத்தோர்த் தாங்கும் காவ லானும்
பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்
அருளொடு புணர்ந்த அகற்சி யானும்
காமம் நீத்த பாலினானும் என்று
இருபாற் பட்ட ஒன்பதின் துறைத்தே. (தொல்—புற-17)

**புறப்பொருள் வெண்பாமாலை திணையும் துறையமுாக முப்பத்தைந்து துறைகள் கூறுகின்றது :-**

சீர்சால் வாகை, வாகை யரவம்
அரச வாகை முரச வாகை
மறக்கள வேள்வியொடு களவேள் வியேய
முன்றேர்க் குரவை பின்றேர்க் குரவை
பார்ப்பன வாகை வாணிக வாகை
வேளாண் வாகை பொருந வாகை
அறிவன் வாகை தாபத வாகை
கூதிர்ப் பாசறை வாடைப் பாசறை
அரச முல்லை பார்ப்பன முல்லை

அவைய முல்லை கணிவன் முல்லை
மூதின் முல்லை ஏறாண் முல்லை
வல்லாண் முல்லை காவல் முல்லை
பேராண்முல்லை மர முல்லையே
குடைமுல் லையொடு கண்படை நிலையே
அவிப்பலி என்றா சால்பு முல்லை
கிணைநிலை ஏனைப் பொருளொடு புகறல்
அருளொடு நீங்கல் உளப்படத் தொகைஇ
மூன்றுதலை யிட்ட மூவீரைந்தும்
வான்றோய் வாகைத் திணையது வாகையே (சூ–8)

***வாகைத்திணை பாலைக்குப்புறனாயவாறு :-*** படைச்செருக்கு முதலிய காரணங்களான் போர் மேற்கொண்டொழுகும் ஏனைய திணைகளினின்றும் வேறாய் எழுமைக்கும் ஏமாப்புடைய கல்வி பற்றியும், பொருள் பற்றியும் தூது பற்றியும் அறப்புறம் முதலாய காவல் பற்றியும், பிரியும் பிரிவுகட்கு உரியதாய்ச் சிறக்கும் பாலைத்திணை போல, வாகைத்திணை வேந்தர்க்கும் மறவர்க்குமே உரிய வெட்சி முதலிய திணைகளைப் போலாமல், அந்தணர் முதலிய நாற்பாலார், அறிவர் தாபதர் முதில் மடவராய மகளிர்க்கும் ஒப்ப உரியதாய் அவரவர் தத்தங் கூற்றைப் பாகுபட மிகுக்கும் ஒழுகலாறாகிச் சிறத்தலானும் கல்வியிற் பிரிவும் பொருட்பிரிவுமாகத் தலைவனுக்குப் பெருமையும் புகழும் சேர்த்தலானும் ஆற்றியிருந்து தலைவன் மீண்டகாலை ஆயத்தாரும் பிறரும் ஏத்துதல் கண்டு தலைவன் பெருமிதமுற்று உவத்தலானும் இவ்வாறே தலைவனும் தன்னை ஒத்தாரொடு உறழ்ந்து மேம்பட்டு வெற்றி பெற்றுப்பெருமித முறுதலானும் பாலை ஏனைய நானிலத்தும் அவற்றின் திரிபாக அமைந்து நிகழுமாறு போலப் பெரும்பான்மையும் வெட்சி முதலிய திணைகளிடமாக அவற்றின் பயனாக நிகழ்தலானும் ஓதலும் தூதும் பிறவுமாகிய கடப்பாட்டாண்மை புரிதற்குப் பின்பனியும் இருவகை வேனிலுமாகிய பெரும்பொழுதும் நண்பகலாகிய சிறுபொழுதும் ஏற்புடைய காலங்களாக அமைதலானும் பாலைக்குரிய முதலும் கருவும் ஒத்துச் சிறத்தலானும் வாகைத்திணை பாலைத்திணைக்குப் புறனாயிற் றென்க.

***வாகைத்திணைக்குரிய முதல் கரு உரிப்பொருள்கள் :–*** பாலைக்குரிய முதற்பொருள்களும் கருப்பொருள்களும் பிறரினும் மேம்பட்டுத் தோன்றும் உரிப்பொருளும் வாகைக்குரியனவாகும்.

***வாகையரவம் :*** (வாகை–பு–வெ) வெள்ளைமலர்க்கண்ணியும் வலிய வீரக் கழலையும் சிவந்த கச்சினையும் அழகு பெற அணிவது வாகை யரவமாம்.

***வாடாவள்ளி :*** (தொல்–புற–5)வாடும் கொடியல்லாத ஆடும் கூத்தாகிய வள்ளிக் கூத்தாகிய துறை. வள்ளி என்னும் தலைப்புக் காண்க.

***வாடைப்பாசறை :*** (வாகை–பு–வெ) பாசறையில் தங்கியிருக்கும் வேந்தன் முதலானோர் வருந்துதற்குக் காரணமாகவரும் வாடைக் காற்றின் மிகுதியைக் கூறுவது.

***வாண்மங்கலம் :*** (பாடாண்—பு—வெ) கடல் போன்ற சேனைகளையுடைய வேந்தனது வாளினைச் சிறப்பித்துக் கூறுவது.

***வாண்மண்ணுநிலை :*** (உழிஞை—பு—வெ) சான்றோர் ஏத்திப் புகழ நீராட்டிய வாளினது வீரத்தைக் கூறுவது.

***வாணிக வாகை :*** – (வாகை—பு—வெ) வணிகரது உழுதுபயன் கொள்ளல் முதலிய அறுவகைச் செயலையும் உயர்த்திச் சொல்வது அறுவகைச் செயலாவன. உழுதுபயன் கொள்ளல், நிரை ஓம்பால், பண்ட வாணிகம், ஓதல் வேட்டல், ஈதல் என்பனவாகும்.

***வாணிக வென்றி :*** - (ஒழிபு—பு—வெ) வாணிகரின் அறுவகைச் செயல் பற்றி வெற்றியைக் கூறுதல்.

***வாணிலை :*** (வஞ்சி—பு—வெ) பகைவரை வெற்றி கொள்ள விரும்பிய வேந்தன் நல்ல நாளில் போர் வாளினைப் புற வீடு செய்வது.

***வாணாட்கோள் :*** (தொல்—புற—11. உழிஞை) பகைவரது அரணத்தைமுற்ற விரும்பிய வேந்தன் கணிவன் குறித்துரைத்த நாளில் அத்திசை நோக்கிக் கொற்ற வாளினைப் புறவீடு செய்தது. (உழிஞை—பு—வெ) பகைவரது அரணினைக் கோடல் கருதி வெற்றிவாளினை நல்ல நாளிலே புறவீடு செய்தது.

***வாயில் நிலை :*** (பாடாண்—பு—வெ) புரவலனது வளமனைவாயிலை நெருங்கி இரவலன் தன் வரவினை அவ்வள்ளலிடத்துத் தெரிவிக்குமாறு வாயில் காவலனிடம் கூறுதல். கடைநிலை காண்க.

***வாயுறை வாழ்த்து :*** (தொல்—புற—29.பாடாண்) வேம்பும் கடுவும் போல வெம்மையுடையவை எனத் தவிர்க்காமல் வழிவழி நன்மை பயக்குமென எண்ணிக் காவற் கிழமையுடைய சொற்களான மெய்ம்மைப் பொருளை வற்புறுத்திக்கூறுதல். (வாய்=வாய்மை—பெய்ம்மை) (பாடாண்—பு—வெ) பிற்பயக்கும் சீர்ம் சொல் என மேம்பட்ட வாயுறைகளைக் கூறி வாழ்த்துதல்.

***வாராமைக்கு அழிதல் :*** (பெருந்—பு—வெ) தலைவி தனக்கு நேர்ந்த சகுனம் வேறுபட்டமையான் தலைவன் வாராதொழிய அதற்குத் தலைவி வருந்தியது.

***வாழ்த்தல் :*** (தொல்—புற—5) பெயரும் பீடும் எழுதிய கல்லை நீராட்டிப் பூசனை செய்து புகழ்ந்து வாழ்த்துதல்.

***வாள் செலவு :*** (காஞ்சி—பு—வெ) படையெடுத்து வஞ்சிவேந்தன் போர்க்கு அழைத்தமையான் மாற்றுவேந்தன் தன் வாட்படையைப் போர் புரிதற்குச் செலுத்தியது.

***வாள்வாய்த்துக் கவிழ்தல் :*** (தொல்—புற—5) இருவகைப் பட்டபிள்ளை நிலைகளுள் ஒன்று. வாளினது தொழில் தப்பாமல் பொருந்திய வழி மறவர் விழுப்புண் பட்டு வீழ்தல்.

***வாளோர் ஆடும் அமலை :*** (தொல்—புற—14 தும்பை) பட்ட வேந்தனைக் கொன்ற வேந்தனது படைமறவர் திரளாக நெருங்கிச் சூழ்ந்து ஆரவாரித்துக் கூத்தாடுதல் (அமலை—திரட்சி).

*விரிச்சி :* (வெட்சி–பு–வெ) வெட்சிமறவர் ஆனிரை கவரச்செல்லுமுன் நன்னிமித்தம் வேண்டி நற்சொல் கேட்டல்.

*விளக்கு நிலை :* (பாடாண்–பு–வெ) வெற்றிக்கு அறிகுறியாக விளக்கு எரியும் நிலை. (2) வேந்தனைச் சூரிய னோடு ஒப்பிட்டுக் கூறினும் அது விளக்கு நிலை எனப்படும்.. விளக்கு–கதிரவன்.

*விறலி கேட்பத் தோழிகூறல் :* (இரு–பெருந்–பு–வெ) தலைவனது பரத்தை ஒழுக்கம் அவனுக்கு ஆரமுதத்தை ஒக்கும் எனத்தோழி விறலியிடம் கூறுவது.

*விறலி தோழிக்கு விளம்பல் :* (இரு–பெருந்–பு–வெ) தலைவனது மூப்பு பரத்தையர்க்கு பெறுதற்கரிய மகிழ்ச்சியைத் தருமென இற்பரத்தை தோழி கேட்ப விறலி சொல்லியது.

*விறலியாற்றுப் படை :* (தொல்–புற–30 .பாடாண்) பரிசில் பெற்று வரும் பாடினி அவ்வள்ளலிடம் செல்லும் வழி முதலியன கூறி விறலியை ஆற்றுப்படுத்துதல். (பாடாண்–பு–வெ) திறல் வேந்தன் புகழ் பாடும் விறலியை அவ்வேந்தனிடம் ஆற்றுப்படுத்துவது.

*வீற்றிருந்த பெருமங்கலம் :* (பாடாண்–பு–வெ) வெற்றி மிக்கவேந்தன் அரியணையில் வீற்றிருந்த சிறப்பைக் கூறுவது.

*வெட்சித்திணை -* மண்ணாசை. அரண்கோடல் முதலிய வேட்கைபற்றி ஒருவேந்தன் மற்றொரு வேந்தனொடு போரிடச் செல்லுமுன் அந்நாட்டு ஆனிரைகளைக் காத்தல் கடமையாதலின் அவற்றைக் கவர்ந்து வருதற் பொருட்டு வெட்சிப் பூச்சூடி மறவர்களைச் செலுத்தலும் கவர்ந்துவந்த ஆனிரைகளைக் காத்தலும் வெட்சித்திணையாகும். அதுபதினான்கு துறைகளையும் மேலும் இரண்டு துறைகளையும் உடையது.

*வெட்சித்திணைபற்றித் தொல்காப்பியம் கூறும் இலக்கணம்.*

அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்
புறத்திணை இலக்கணம் திறம்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரத் தோன்றும் ஈரேழ்துறைத்தே. (தொல்–புற–1)

வேந்து விடு முனைஞர் வேற்றுப் புலக்களவின்
ஆதந் தோம்பல் மேவற்றாகும். (தொல்–புற–2)

படையியங்கரவம் பராக்கத்து விரிச்சி
புடைகெடப் போகிய செலவே புடைகெட
ஒற்றின் ஆகிய வேயே, வேய்ப்புறம்
முற்றின் ஆகிய புறத்திறை, முற்றிய
ஊர்கொலை ஆகோள் பூசல் மாற்றே
நோயின் றுய்த்தல் நுவலுழித் தோற்றம்

தந்து நிறை பரதீடு உண்டாட்டுக் கொடையென
வந்த ஈரேழ் வகையிற்றாகும். (தொல்–புற–3)
மறங்கடை கூட்டிய துடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அகத்திணைப் புறனே. (தொல்–புற–4)

**புறப்பொருள் வெண்பாமாலை கூறும் இலக்கணம் :-**

வெட்சி, வெட்சியரவம் விரிச்சி செலவு
வேயே புறத்திறை ஊர்கொலை ஆகோள்
பூசல் மாற்றே புகழ் சூரத் துய்த்தல்
தலைத்தோற் றம்மே தந்து நிறை பாதீடு
உண்டாட்டு உயர்கொடை புலனறி சிறப்பே
பிள்ளை வழக்கே பெருந்துடி நிலையே
கொற்றவை நிலையே வெறியாட்டு உளப்பட
எட்டிரண்டு ஏனை நான்கொடு தொகைஇ
வெட்சியும் வெட்சித் துறையுமாகும்.

***வெட்சித்திணை :*** - "வென்றி வேந்தன் பணிப்பவும் பணிப்பின்றியும் சென்று இகல்முனை ஆதந்தன்று"

இது மன்னுறுதொழில் தன்னுறு தொழில் என இருவகையாக நிகழும்.

***வெட்சித்திணை குறிஞ்சித் திணைக்குப் புறனாயவாறு :-***

கங்குலாகிய சிறுபொழுதும் ஆனிரைகளைக் களவிற் கோடலாகிய செயலும் ஊறஞ்சாது தாம் கருதியது முடித்தலும் சூளுரைத்தலும் ஆனிரையை நோயின்றுய்த்தலும் பிறவும். குறிஞ்சிக் குரிய முதற்பொருளொடும் உரிப் பொருளோடும் ஒத்தலானும் வரைபொருட் பிரிவு குறுகிய காலப் பிரிவாகலானும் அவ்வாறே இதுவும் குறுகிய காலத்ததாகலானும் தந்துநிறை பாதீடு முதலியவை பொருளீட்டலாக அமைதலானும் களவிற்குரிய குறிஞ்சித் திணை யோடு ஒத்து அதற்குப் புறனாயிற்றெனக.

***வெட்சித்திணைக்குரிய முதல் கருஉரிப்பொருள் :–*** மைவரை உலகமாகிய நிலனும் கூதிரும் யாமமுமாகிய பொழுதும் குறிஞ்சிக் கருப்பொருள்களும் களவின் நிரைகோடலாகிய உரிப்பொருளுமாம்.

***வெட்சியரவம் :–*** (வெட்சி–பு–வெ) வெட்சி மறவர் பகைவர் மேற்செல்லத் துடிமுழக்கி ஆரவாரத்தொடு செல்வது.

***வெருவரு நிலை :–*** (தும்பை–பு–வெ) போரினிடத்துப் பகைவர் எய்த அம்புகளான் மார்பம் பிளக்க அவ் அம்புகள் மொய்த்தலின் உடம்பு கீழே விழாமல் நிற்கும் மறவனது நிலையைக் கூறுவது.

***வெள்ளி நிலை :*** (பாடாண்–பு–வெ) மழைபெய்தற்கு அறிகுறியாக விண்ணிடைத் தோன்றும் வெள்ளி என்னும் விண் மீனினது நிலையை எடுத்துக் கூறுவது.

***வெளிப்பட இரத்தல் :*** (கைக்–பு–வெ) எழில்நலம் வாய்ந்த தலைவியை கூடுதற்கு ஏக்கமுற்று தலைவன் இரந்து கூறுவது.

***வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் :*** (தொல்–புற–5) தெய்வத்தின் கருத்தறிந்துரைக்கும் சிறப்பினாற் குறிகேட்போர் விரும்பு தலையுடய வாயினனான வெறியாட்டு நிகழ்த்தும் வேலன். காந்தள் என்னும் மறக் கூத்தினை நிகழ்த்துபவன். வெறியாட்டயர்ந்த காந்தள் (தொல்–புற–5) வேலன் தெய்வ முற்று ஆடுதலைச் செய்த மறநிலைக் கூத்தாகிய காந்தள் என்னும் துறை.

***வெறியாட்டு :*** (இரு–பெருந்–பு–வெ) தலைவனுடைய அருளைக் காமுற்ற தலைவி தாயர் அறியாமல் அயல்மனை மகளிருடன் ஆடும் வெறிக்கூத்து (வெட்சி–பு–வெ) வெட்சி மறவரின் காதல் மகளிர் காதல் மகளிர் வெட்சியாரின் வினை வெற்றி யொடு முடிதல் வேண்டி முருகனை எண்ணி வெறிக் கூத்தாடுதல்.

***வென்றோர் விளக்கம் :*** (தொல்–புற–7. வஞ்சி) வஞ்சிப் போரிடைப் பகைவரை வென்று மேம்பட்ட மறவரைப் பாணரும் புலவரும் பாராட்டி ஏத்துதலானாகிய விளக்கம் (விளக்கம் = ஒளி =கீர்த்தி)

***வேட்கை முந்துறுத்தல் :*** (பெருந்–பு–வெ) காமவேட்கை மிருதலான் தலைவி தலைவனிடத்துத் தன் வேட்கையைச் சொல்வது.

***வேத்தியல் மலிவு :*** கரந்–பு–வெ) தோள்வலிமிக்க தம் மற வேந்தனைக் கரந்தை மறவர் மேம்படுத்திக் கூறுதல்.

***வேந்து விடு முனைஞர் :*** (தொல்–புற–2. வெட்சி) ஆனிரைகளைக் கவர்தற்கு வேந்தனாற் செலுத்தப் பெறும் வெட்சி மறவர்.

***வேம்பு :*** (பொது–பு–வெ) பகைவரைப் போரில் வெல்லும் சிறப்பினை உடைய பாண்டியரது வேப்ப மலரினைப் புகழ்ந்து கூறுவது.

***வேய் :*** (வெட்சி–பு–வெ) பகைவர் தம் முனையூரில் ஆனிரைகள் இருக்குமிடங்களை ஆராய்ந்து வந்த ஒற்றற்களின் ஒற்றினை அறிந்தமை கூறுவது.

***வேலின் ஒக்கிய விளக்குநிலை :*** (தொல்–புற–29–பாடாண்) நிலை கோடாது நெடி தோங்கி நிற்கும் வேல் போலப் புரவலன் தன் செங்கோலை உயர்த்தி உயர்த்திக் கூறும் விளக்கு நிலை என்னும் துறை. சுடர் விளக்கினைச் சிறப்பித்துக் கூறுவது என்பார் இளம்பூரனார்.

***வேள்வி நிலை :*** (பாடாண்–பு–வெ) வேந்தன் தேவர்கள் மகிழச் செந்தீ வளர்த்து வேள்வி புரியும் நிலைமையைச் சொல்வது.

***வேளாண் வாகை :*** (வாகை–பு–வெ) அந்தணர் அரசர் வணிகர் என்னும் மேல் நிலையாளர் மகிழ வாய்மையான் வேளாளர் பணியாற்றும் மேன்மையைக் கூறுதல்.

***வேற்றுப்படை வரவு :*** (உழிஞை–பு–வெ) முற்றுகையிட்ட வேந்தன் முற்றுகை நீங்க

நொச்சியார்க்குத் துணையாக வேற்றுப்படை வந்த வரவினைக் கூறுவது.

***வேற்றுப்புலம் :*** (தொல்–புற–2.வெட்சி) ஆனிரைகள் உள்ள பகைவரது ஊர்.

***வேன்மிகுதானை :*** (தொல்–புற–14. தும்பை) வேலாற் போர் செய்தலான் வெற்றி மிகும் படை.

***வேனிற் பாசறை :*** (தொல்–புற–17. வாகை) வேனிற் காலத்துப்படை எடுத்துச் சென்ற வேந்தனும் மறவரும் தங்கியிருக்கும் பாசறைக்கண் தலைவன் உள்ளம் தலைவியின் பாற்செல்லுதலைத் தவிர்த்துப் போரின் கண் காதலைச் செய்யும் வாகை.

*பின்னிணைப்பு :*

## *வீரசோழியம் கூறும் புறப்பொருள் இலக்கணம்*

தொல்காப்பியத்திற்குப்பின் புறப்பொருள் பற்றிக் கூறும் தமிழ் இலக்கண நூல் பன்னிரு படலம் என்பது தொல்காப்பிய உரையுள் காணப்படும் செய்தியாகும். அந்நூல் இற்றைக்கு இல்லை. அதற்குப்பின் அதனை முதனூலாகக் கொண்டு சேரநாட்டில் வாழ்ந்த ஐயனாரிதனார் என்னும் புலவர் பெருமகனார் இயற்றிய புறப்பொருள் வெண்பாமாலை தோன்றியது. இது பழந்தமிழ் மரபிலிருந்து சிறிது வேறுபடினும் புறப்பொருளிலக்கணத்தை மாணாக்கர் அறிந்து கொள்ளப் பாடமாகப் பயிற்றுவிக்கப் பெற்று வருகிறது. அதனான் இவ்வகராதியில் தொல்காப்பியச் செய்திகளும் புறப்பொருள் வெண்பாமாலைச் செய்திகளும் மட்டுமே இடம் பெறுவன வாயின. புறப்பொருள் வெண்பாமாலைக்குப்பின் இற்றைக்குக் காணக்கிடைக்கும் நூல் வீரசோழியமாகும். அதன் பொருட் படலம் அகப்பொருள் பற்றியும் புறப்பொருள் பற்றியும் கூறுகின்றது. அந்நூலாசிரியர் தம் மதத்திற்கேற்ப அவற்றை விளக்கியுள்ளார். அவரது கோட்பாடுகளையும் மாணாக்கர் அறிந்து கொள்ளவேண்டும் என்னும் நோக்கில் வீரசோழியப் புறப்பொருள் இலக்கணப்பகுதி பின்னிணைப்பாக அமைக்கப் பெற்றுள்ளது.

இந்நூல் தொல்காப்பியத்தை ஒட்டித் திணைகளை வகுத்துக்கொண்டு அவற்றைப் புறம் புறப்புறம் என வகுத்துக் கூறுகின்றது துறைகளைச் சுருக்கமாக அமைத்துள்ளது. துறைகளின் பெயர்கள் சிறிது வேறுபாடுகளுடன் அமைந்துள்ளன.

### *புறமும் புறப்புறமும்*

வெட்சி கரந்தை விறல்வஞ்சி காஞ்சி உழிஞை நொச்சி
உட்கிய தும்பை என்று ஏழும் புறம் : உயர்வாகை தன்பின்
கொட்கும் பொதுவியல் பாடாண் புறப்புறமும் கொண்டிவற்றை
உட்குமதுவிட்டுரவோர் உரைப்படி ஓர்ந்தறியே (பொருள் – 13)

### *வெட்சியின் வகை*

ஒருப்பாடு நற்சொல் செலவொற்றுரைப்புப் புகல் பொருதல்
விருப்பா நிரைகொண்ட வரைத் தடுத்தல் நெறி செலுத்தல்
செருப்பாடு கைப்படை கரந்தூர் புகல் திறங் கூறிடுதல்
பருப்பாடு பாலாற் களித்தல் வெட்சித்திறம் பான் மொழியே. (பெரு–14)

(1) ஒருப்பாடு – நிரை கவர்தற் பொருட்டு மறவர்கள் ஒருங்கு திரளுதல் (2) நற்சொல் – விரிச்சி கேட்டல் (3) செலவு = ஆநிரைகள் இருக்குமிடம் செல்லுதல் (4) ஒற்றாய்ந்து கூறல் (5) புகல் = கொட்டில்களைச் சூழ்தல் (6) பொருதல் கரந்தையாரொடு போரிடுதல் (7) நிரை கொள்ளல் = ஆநிரைகளைக் கவர்தல் (8) தடுத்தல் = பூசல் மாற்றுதல் (9) நெறி செலுத்தல் = வழியிடை ஊறுபடாமல் நிரைகளைச் செலுத்துதல் (10) கைப்படை = கைப்படுத்த நிரைகளை செலுத்துதல்

(11) கரந்து ஊர்புகல் = தம்முள் மறைத்துச் சேர்த்தல் (12) கூறிடுதல் = பங்கிட்டுக் கொள்ளல் (13) பருப்பாடு = உண்டாடுதல் (14) அளித்தல் = பாணர் முதலானோர்க்கு வழங்கல் எனப் பதினான்கு துறைகள் என்பது உரையாளர் விளக்கம்.

## *கரந்தையின் வகை*

ஓடாப் படையாண்மை உன்னம் நிரை மீட்டல் மன்னர் வெற்றி
கோடார திறங்கூறல் தன் திறங் கூறுதல் கொற்றப் பொற்றார்
சூடாப் பொலிகுதல் ஆரமர் ஒட்டல் துகளறுகல்
தேடாப் பொறித்தல் கரந்தைத் திறம் மற்றும் தேர்ந்தறியே (பொரு–15)

ஓடாப் படையாண்மை = வருதார் தாங்கல். உன்னநிலையாவது வென்றி வினை முன்முடித்தவன் திறங் கூறி உன்னமரத்தை நற்போரினன் நாடல் உன்னக் குறி செய்க எனக் கிளத்தல். கொற்றப் பொற்றார் சூடாப் பொலிதல் = பனையும் வேம்பும் ஆத்தியுமென்று முக்கோக்களுக்கும் சொல்லப்பட்ட மூன்று தாரும் சூடிப் போர்ப்புக் கார்க்குப் பாடுதல். ஆரமர் ஒட்டலாவது பூசலிட்டு ஒட்டுவது. துகளறுகள் தேடாப் பொறித்தலாவது போருள் மடிந்தார் பெயர் பொறிக்கக் கல் தேடுதலும் பொறித்த கல்லு நீருட் குளிப்பித்தலும் கல் நடுதலுமாம். பெரும்படை என்பது ஒருதனியான் வாள் வினை செய்து பட்டார்க்கு வினை முற்று வித்து அவ்வினை வேறுபடுத்தல். வாழ்த்தல் என்பது பலவாள் வினை செய்து பட்டார்கற்களைப் பார்த்துப் புகழ்ச்சி செய்தல். இவை உரையாசிரியர் தரும் விளக்கம்.

## *வஞ்சியின் வகை*

அரவ மெடுத்தல் வயங்கு ஈகை விலக்கருகை
விரவு தனிச்சேவகம் வென்றி கூறல் வென்றார் விளக்கம்
நிரவும் வரிவொடு சோற்று நிலை கொற்றவர் மெலிவும்
பரவு தழிஞ்சி யென் றின்னவை வஞ்சியின் பாற்படுமே (பெரு – 16)

அரவம் = படைபெழுச்சி. எடுத்தல் = பனையெடுத்தல் வயங்கியல் = மேற்செல்வான் துணையரசரால் விளக்கமுற்ற பெருமை. ஈகை = மேற்செல்லப்படுவதாகிய தன் சேனைத்தலைவற்குப் பெருங்கொடைத் தண்ணளி நல்குதல் விலக்கருமை = மேற்செல்லப்படுவான் தனது விலக்குதற் கரிய வென்றி மிகு செலவு. தனிச்சேவகம் = வருவி சைப்புனலைக் கற் சிறை போல ஒருவன் தாங்கிய பெருமை வென்றி கூறல் = பத்துத் தலையோனைக்கட்டி உன்பரதத்து மடமொழியை மீளேனல் லேன் என வருவது . நிரவும் வழி= பெறு முறையான் உணா மிகுத்தல். கொற்றவர் மெலிவு = (மன்னவர் மெலிவு) பரவுதழிஞ்சி = உடைந்த படைஞர் பின் செல்லாமை.

## *காஞ்சியின் வகை*

நிலையாமை வாழ்த்து மயக்கம் முதுமை நிலையினொடும்
தொலையா மகிழ்ச்சி பெருமை தீப்பாய்தல் சுரத்திடைத்தன்

தலையார் கணவன் தனையிழத்தல் தனியே யிரங்கல்
கலையார் மனைவி பெய் சூளுறவு என்றிவை காஞ்சி யென்னே

நிலையாமையாவது – அறம்பொருள் இன்பம் இளமை யாக்கை உயிராதி நிலையாமை. வாழ்த்தாவது = கடவுள் வாழ்த்து முதலியன. மயக்கம் என்பது பூசல் மயக்கம். அது புகழுடையன செய்து துஞ்சிய பெரு மக்களைச் சுற்றத்தார் புலம்புதல். முதுமையாவது = தவத்தின் கண் நின்றார்க்கு எடுத்துக்காட்டிய உவமைச்சொல் நிலையாவது = கையறு நிலையும் தபுதார நிலையும் தாங்கிய நிலையும் தலைப்பெயல் நிலையும் என்ப. அவற்றுள் கையறு நிலையாவது கழிந்தோர் செய்த கழிவழீஇய ஒழிந்தோர் புலம்பும் கைய்றவு. தபுதாரநிலையாவது = காதலியை இழந்தார் காதல் நிலை என்பது. தாங்கிய நிலையாவது = காதலனை இழந்தோள் நிலை. தலைப்பெயல் நிலையாவது அவர் பெறும் சிறப்பிற் புதல்வரைப் பெறாத்தலை வரும் தலைப் பெயல்நிலை அது அங்கவனோடு இறந்தோரைப் பற்றிவருவது மகிழ்ச்சியாவது = ஒருயிராவதறிக உளங்கலந்தார்க் கென்ப. பெருமையாவது = கூற்றம் மற்றத்தற்கரிது செயற்பாலனவல்லே செய்மின் எனப் பெரியோராற் சொல்லப்பட்ட சொற்பெருமை. தீப்பாய்தலாவது = கணவனொடு நனியழற்புகல். சுரத்திடைத்தன் தலையார் கண்வனை இழத்தலாவது = சுரத்திடைத்தலைவனை இழந்த தலைமகள் முதுமை. தனியேயிரங்கலாவது = துணையிழந்த தலைமகன் தனியே இருந்திரங்கல் கலையார் மனைவி என்பது = களத்தில் வீழ்ந்த தலைமகனைத் தலைமகள் காத்த பெருமை இஃது செருக்களத்துப் பேதையைப் பற்றிப் புணர்தல். சூளுறவாவது = சூளுரை சொல்லுதல். இவை உரையாசிரியர் தரும் விளக்கம்.

## *உழிஞையின் வகை*

வேந்தன் சிறப்பு மதிலேறுதல் வென்றி வாட் சிறப்புக்
காந்தும் படைமிகை வாட் கோளொடு காவலே முடிகோள்
ஏந்துந் தொகைநிலை கொற்ற நீர்ப் போர்ச் செல்வம் ஊர்ச் செருவே
போந்த முதிர்வு குறுமை என்றாம் உழிஞைப் புணர்ப்பே (பொருள் 18)

வேந்தன் சிறப்பு = வேந்தனைத் தெய்வத்தொடு வைத்துச் சிறப்பித்தல். மதிலேறுதலாவது = பகைவர் மதிலை மேற் சென்றோன் சேனை ஏறுதல். படைமிகை = படையின் பெருக்கத்தைப் கூறுவது. நாட் கோளாவது = கொற்றக் குடையைத்தான், கொற்றவாளைத்தான் குறித்து நாட்கொள்வது காவலாவது = அகத்தோனால் அமைக்கப்பட்ட அரண்காவல் முடிகோளாவது = தொக்கிலாரை முடி கொண்ட சிறப்பு. தொகைநிலையாவது = இருவர் சேனையும் தொக்கநிலை. கொற்றமாவது = அரண் சூழ்ந்த வேந்தன் கொற்றச் சிறப்புணர்த்தல. நீர்ப் போராவது = வலியாரைப் பெரியாரைத் துணையின்றியே சென்று பொருதல். பிறவு மன்ன. உழிஞை எல்லாம் அரண்பற்றியே வரும்.

## *வாகையின் வகை*

நாற்குலப் பக்கமும் காலம் களவழி நற்குரவை

ஆற்றல் வல்லாண் வேட்கை யார்பக்க மேன்மை அரும்பொருளே
தோற்றிய காவல் துறவு கொடை படையாளர்பக்கம்
மாற்றிய ஒற்றுமையோடு மற்றும் இவை வாகையிலே (பொ—19)

*நாற்குலப்பக்கமாவது* : ஓதல், ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல், கோடல், கொடுத்தல் என்னும் அந்தணர் அறுதொழிலும், ஓதல், வேட்டல், கொடுத்தல், படைக்கலத்தின் வாழ்தல் பல்லுயிரோம்பல் என்னும் அரசர் ஐந்தொழிலும், ஓதல், வேட்டல், கொடுத்தல், உழுதல், பசுக்காத்தல் வாணிபம் என்னும் வைசியர் அறுதொழிலும், கொடுத்தல், உழுதல், பசுக்காத்தல் வாணிபம் சிறப்பித்தல், நரம்புக்கருவி முதலாய கருவிகற்றல் அந்தணர் வழி ஒழுகுதல் என்னும் வேளாளர் அறுதொழிலுமாம்.

முக்கால மாவது = மூன்றுகாலம். களவழி = களத்திலழிவு குரவையாவது = இன்றேர்க் குரவையிட்டாடுதல். ஆற்றலாவது = ஆரியரணாத் தன் பகை மிகையை மதியாது பொரும் ஆற்றல். வல்லாண் பக்கமாவது = பகை வென்று விளங்கி மதிப் பெருவாகை வண்டாரத்துப் பெறுவான் செங்களத்துப் புலர்ந்து மாய்தல். வேட்கையார் பக்கமாவது = விருந்தோம்பலும் அழலோம்பலும் உட்பட எண்வகைத் தாம் பக்கம், மேன்மையாவது = பெரும்பகை தாங்கும் மேன்மை. அது அருளொடு புணர்ந்த அகற்சியாம். பொருளாவது = அறம்பொருளின்பம் மூன்று பொருளினும் விடாமற் புணர்ப்பது. காவலாவது = பிழைத்தோரைத் தாங்குதல். துறவாவது = தவத்தினை வென்ற பக்கம் (அஃதாவது காமத்தை வெல்லுதல்) கொடை= தன் உடைமை, உடம்பு உயிர் முதலாயினவற்றை வழங்கல். படையாளர் பக்கமாவது = கருதிய படையும் படையாளர் பக்கம், ஒற்றுமையாவது சிறியோரை நாணப் பெரியோரைக் கூறிய கூறுபாட்டிற் கடி மனத்தை ஒற்றமை கொள்ளல் = மற்றும் என்றமையின் எட்டியல் சான்றோர்பக்கமும் உட்படக் கொள்க. எட்டியலாவன.

அழுக்காறிலாமை அவாவின்மை தூய்மை
ஒழுக்கம் குடிப்பிறப்பு வாய்மை = இழுக்காத
நற் புலமை யோடு நடுவு நிலைமையே
கற்புடைய எட்டுறுப்புக் காண்

என்றமையாலறிக.

*சான்றோர் பக்கமாவது :* பகைவர் கண்ணும் தன் பாலார் கண்ணும் ஒப்புமையாகப் பாசறையுள்ளாச் சால்புடைமை கூறுதல். அஞ்சாச் சிறப்பு என்பதும் அது பிறவுமன்ன.

## *தும்பையின் வகை*

நிலைபாழி கோளொடு வாளாட் டுடைபடை நீள்களிற்றின்
தொலையார் மலைவிவை தும்பை விகற்பங்கள் தொன்மைமிக்க
தலையாய நூலவை தன்னினும் கண்டிங் கொழிந்த வெல்லாம்

சிலையாரும் நன்னுதல் மாதே அறிந்துகொள் செப்பிடவே. (பொ—20)

***நிலையாவன :*** தானை யானை குதிரை தேர் இவற்றின் நிலை. பாழிகோளாவது = கைப்படை விடுத்து மெய் கொண்டு பொரும் தறுகணாளர் ஏமப் பெருமை வாளாட்டமாவது = முரண்தேர் சூழ்ந்த களிற்றினத் தொடும் பட்ட வேந்தனை அட்ட வேந்தர் தாமும் மறவரும் ஆடும்பொலிவு. உடைபடையாவது = ஒருவற்குப் பலபடைத்தலைவன் வாளினால் ஒச்சப்பட்ட உடைபடைத் தொகுதி அதற்கு நூழில் ஏன்றும் பெயராம். களிற்றின் தொலையார் மலைவாவது = களிற்றொடும் மலைதலும் படுதலும் என இவை. பிறவும் அன்ன.

***பாடாண் வகை***

புகட்சி பரவல் குறிப்புக் கொடிநிலை கந்தழியே
இகட்சி மலிவள்ளி என்றிவை ஆறும் நெறி முறையில்
திகட்சி மலைதரு பாடாண் பகுதி செப்பாதனவும்
இகட்சி உண்டாகா வகை தேர்ந்து அறிதல் இயல்புடைத்தே.

***புகட்சியாவது புகழ்:*** பரவலாவது = மன்னனைப் பரவுதல். குறிப்பாவது நன்மை வேண்டின் தெய்வத்தை வழிபடும் என்பது. கொடிநிலையாவது = கொடியது தன்மை கூறுவது. கந்தழியாவது = செருவில் தெட்பமுடைமை வள்ளியாவது முருகவேளைக் குறித்தது. பிறவுமன்ன.

**இனி ஒருசாரார் கொள்கையாக உரையாசிரியர் கூறும் குறிப்புக்களுள் புறத்திணை பற்றியவை வருமாறு.**

அறத்தினும் பொருளினும் அன்பினும் அறத்திறம்
வரைத்த நேர்க்கத்துப் புறத்திணையாகும் — அவைதாம்
வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி
நொச்சி உழிஞை தும்பை வாகை
எச்சப் படலமோ டிவைஎன மொழிப

அறனும் வாட்கையும் ஒருதலைக்காமமும்
பொது வியல் பாடாண் நயனிலைப்படலமென்று
இவைகளனைத்தும் அகப்புறமாகும்.

வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம்
வட்கார் மேற்செல்வது வஞ்சியாம் — உட்காது
எதிர் ஊன்றல் காஞ்சி எயில் காத்தல் நொச்சி
அது வளைத்தலாகும் உழிஞை — அதிரப்
பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கார்
செருவென் றதுவாகை யாம்.

"வாகை பாடாண் பொதுவியல் திணையெனப்
போகிய மூன்றும் புறப்புறப் பொருளே"

*எனது புதிய இலக்கணநூலாகிய "தென்னூல்" இலக்கியப் படலத்தில் தொகுத்துரைக்கப் பெற்ற புறப்பொருள் இலக்கணப் பகுதி இங்கே தரப்படுகின்றது.*

## புறத்திணைப் பொதுவியல்பு

1. அகத்திணை மருங்கின் இன்ப ஒழுக்கம்
நிகழ்தற் கேதுவாய் அவற்றது புறனாய்
பாற்பட அமைந்த நாற்பா லவருள்
நான்மறை ஓதலும் கோன்முறை காட்டலும்
வேட்டு வேட் பித்தலும் மறுவில் செய்தி
மூவகைக் காலமும் தெரிந்துநன் காற்றலும்
ஆகிய அந்தணர் ஒழுக லாறுகளும்
குடிமுறை யாகக் கோல்புரிந் தாளும்
கடமையைப் பூண்டு மந்திரச் சுற்றமொடு
படைவலி பெருக்கிக் தடமதில் எழுப்பிக்
குடி புறங் காக்கும் குறிக்கோள் மேவி
நெடுநிலம் பொதுவெனப் பொறாஅது முழுமையும்
தன்னகப் படுத்தும் பூட்கையும் முரண்படு
மன்னரை வென்றவர் நாட்டுவளங் கவரும்
வேட்கையும் தம்மைப் போற்றுவார்க் கருளி
ஈதலும் பகைவரைக் களைதலும் வாகைபெற்று
ஒளிர்தலும் சான்ற முடியுடை வேந்தர்
குறுநில மன்னர்தம் ஒழுகலா றுகளும்
முதுகுடிப் பெண்டிர் மூதின்முல்லையும்
வணிகர்தம் வளமுறு வினைகளும் வேளாண்
மாந்தர்தம் மாண்பமை ஒழுகலா றுகளும்
பல்வேறு வினைநிலைப் பாங்கினர் புரியும்
வாகையும் முல்லையும் வகைபெறக் கிளத்தலும்
நடைமுறை பிறவும், செல்வமும் இளமையும்
யாக்கையும் நிலையாப் போக்கினைச் சுட்டலும்
உழவு முதலாக உலகைவளப் படுத்தும்
வினைநல மாட்சியான் வீறுற் றிலங்கும்
மாந்தரைப் போற்றலும் கடவுளர் தம்மை
மக்களொடு சார்த்தி ஏத்தலும் வாழ்த்தலும்

அளிவளர் புரவலர் இடத்திர வலரை
அவர்திறன் விளக்கி ஆற்றுப் படுத்தலும்
பரிசுபெற் றரசரைப் புகழ்தலும் பிறவுமாய்
அறம்பொருள் வீடெனும் திறமுற நிகழும்
வரன்முறைப் படுத்த துறையொடு பொருந்திய
வெட்சி முதலாய ஒழுக லாறுகள்
புலப்படத் தெரிப்பது புறத்திணை மரபே.

## வெட்சித்திணை ஒழுகலாறு

2. ஆற்றா மன்னர்தம் ஆட்சியைக் கவர
எண்ணிய வேந்தன் படைகொடு புகுமுன்
பேணற் குரியஆ னிரைகளைக் களவின்
கொள்ளுதற் கேவும் மள்ளரும் அவரை
வெல்லுதற் கெதிரும் வீரரும் தத்தம்
மன்னவர்க் குரிய சின்னப் பூவோடு
வெட்சியும் கரந்தையும் சூடிஆ னிரைகளைக்
கவரவும் மீட்கவும் புரியும் முதற்போர்
குறிஞ்சியது புறனாயக் கொளத்தகு மரபின்
வெட்சித் திணையென விளம்புவர் நூலோர்

## மூவேந்தர் அடையாளப் பூக்கள்

3. செந்தமிழ்ச் சேர சோழ பாண்டியர்
மைந்துறச் சூடும் போந்தை ஆர் வேம்பெனும்
மூன்றும்மூ வேந்தர் அடையாளப் பூக்களாம்

## வெட்சித் துறைகள்

படையியங் கரவம் விரிச்சிபடைச் செலவு
ஒற்றுதல் புறத்திறை ஊர்கொலை ஆகோள்
பூசல் மாற்றே நோயின் றுய்த்தல்
நுவல்வழித் தோற்றம் தந்துநிறை பாதீடு
உண்டாட்டுக் கொடையிவை கொள்வோர்க் குரிய ;
ஆரமர் ஒட்டல் ஆபெயர்த்துத்தருதல்
மீட்போர்க் குரிய துறையெனமொழிப.

## போர்த் திணைக்கெல்லாம் பொதுவான துறைகள்

கொற்றவை பரவலும் துடிநிலை உரைத்தலும்
குடையும் வாளும் நாட்கொளல் அன்றியும்

வெவ்வாய் வேலன் ஆடுறு காந்தளும்
வள்ளிக் கூத்தும் வார்கழல் புனைதலும்
உன்னங் கோடலும் பூவைநிலை அறிதலும்
சின்னப் பூவொடு திணைப்பூச் சூடலும்
சீர்கால் வேந்தன் சிறப்பெடுத் துரைத்தலும்
தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும்
பிள்ளை நிலையும் பிள்ளைபா ராட்டும்
மறப்புகழ் நாட்டித் துறக்கம் புக்கோன்
நிலைபெறும் கல்லினைக் காண்டல் கால்கொளல்
நீர்ப்படை நடுதல் வாழ்த்தல் போர்க்குரி
புறத்திணைக் கெல்லாம் பொதுவென மொழிப

## வஞ்சித் திணை இயல்பு

6. எஞ்சா மண்ணசை யான்பிறன் நிலத்தைத்
தன்னகப் படுத்திய மன்னனை ஒறுப்ப
வஞ்சிதலை மிலைந்து அஞ்சுதக மேற்சென்று
அடுதலும் மற்றவன் ஆங்ஙனம் எதிர்தலும்
முல்லையது புறனா முறைபெறு மரபின்
வஞ்சித் திணையென வழங்குவர் புலவர்

## வஞ்சித்திணைத் துறைகள்

7. வயங்கல் எய்திய பெருமை, வழங்கும்
இயங்குபடை அரவம் எரிபரந் தெடுத்தல்
கொடைமை யடுத்தூர்ந் தெய்திய கொற்றம்
மாராயம் பெற்றோன் நெடுமொழி கூறல்
படையின் றுய்த்தபே ராண்மை, ஒருவனே
வருவிசைப் புனலைக் கற்சிறை போலத்
தாங்கிய பெருமை பெருஞ்சோ றளித்தல்
வென்றோர் விளக்கம் தோற்றோர் தேய்வு
தழிஞ்சியொடு பிறவும் கழிபெருஞ் சிறப்பின்
வஞ்சிக் குரிய துறையென மொழிப

## உழிஞைத்திணை இயல்பு

8. காட்டரண் நீரரண் மலையரண் அன்றியும்
ஆக்கிய அருமதில் அகத்திருப் போனை
வேறலைக் கருதி மாறுபட் டெழுந்தோன்
உழிஞை சூடிக் கடிமதிற் கிவர்தலும்

அரணகத் திருந்தோன் நொச்சி மிலைந்து
பொருதற் கெதிர்தலும் மருதத்துப் புறனாம்
உழிஞைத் திணையென ஓதுவர் புலவர்

## உழிஞைத்திணைத் துறைகள்

9. கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம்
உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பு
தொல்லெயிற் கிவர்தல் தோலின் பெருக்கமென்று
ஈரிரு துறையும் இவர்வோர் தமக்கும்
அகத்தோன் பெருவளம், அணுகிய பகைவரை
அணங்குதல் ஒருதான் மண்டிய குறுமை
அரும்பகை பேணார் ஆரெயிற் சிறப்பெனும்
ஒருநான்கு துறையும் அகத்தோர் தமக்கும்
சிறப்பின, மடையமை ஏணிமிசை மயக்கம்
அமர்கடந்து முற்றல் அகத்தோன் வீழ்ச்சி
புறத்தோன் வீழ்வு நீரிடைப் பாசி
பாசி மறம்எயில் கைக்கொளல் இகல்மதிற்
குடுமி கொண்ட மண்ணு மங்கலம்
வாண்மங் கலம்தொகை நிலையெனும் பத்தும்
பிறவும் உழிஞைப் பொதுவென மொழிப

## தும்பைத்திணை இயல்பு

10. தனதுபே ராற்றலும் தன்படை வலியும்
காட்டுதற் பொருட்டா இருதிற வேந்தரும்
மூவகைப் படையும் தம்முள் முரணி
வேலும் கணையும் மேனியில் மொய்க்கக்
குறையுடல் துள்ளக் கொடுஞ்சம ராடல்
நெய்தலது புறமா நிலைபெறு மரபின்
தும்பைத் திணையெனச் சொல்லுவர் புலவர்

## தும்பைத்திணைத் துறைகள்

11. தானை யானை குதிரை யென்னும்
மூவகை மறமும் வேந்தனைக் காக்கவேல்
எறிந்ததார் நிலையும் தலைவர் இருவரும்
தபுதலும் ஒருவன் கூ ஏழ தாங்கிய
எருமை மறமும் எஃகுபடை யறுத்துப்
பாழி கொள்ளும் ஏமமும் களிறெறிந்து

எதிர்ந்தோர் பாடும் களிற்றுட னிலையும்
வென்ற வேந்தன் வேலோர் ஆடும்
அமலையும் இருபெரும் வேந்தரும் சுற்றமும்
வீழ்ந்ததொகை நிலையும் அதுபொறா தொருவன்
மணடிய நல்லிசை நிலையும் நூழிலும்
தும்பைக் கமைந்த துறையென மொழிப

## வாகைத்திணை பொதுவியல்பு

12. மனமொழி மெய்களான் வினைபுரிந் தியங்கும்
மாந்தர்தம் தொழிலை மற்றவர் தம்மினும்
பாகுபட மிகுத்தல் பாலையது புறானக்
கொளப்படும் வாகைத் திணையெனக் கூறுப

## சிறப்பியல்பு

13. கற்பொழுக் கத்துள் அவரவர்க் குரியவென்று
இயம்பும் முறையான் பார்ப்பார்க் குரிய
அறுவகைக் கண்ணும் வணிகர் வேளாண்
மாந்தர்க் கமைந்த அறுவகைக் கண்ணும்
மூவகைக் காலமும் முறைதெரிந் தாற்றும்
அறிவர்தம் வினைக்கணும் எண்வகை நெறியும்
கைவரப் பெற்ற முனிவர்தம் திறத்தினும்
மைந்துடை மறவர் வீறுபெறு வினையினும்
கலைநலந் தேர்ந்தோர் மலைவறு புலவோர்
தத்தம் வினையினும் மனையறத் தமைந்த
மறக்குடி மகளிர்தம் மாண்பினும் ஓங்கித்
திகழ்தலும் உறழ்ச்சியில் மீக்கூர்ந் தொளிர்தலும்
வாகைக் குரிய பகுதிகள் என்ப

## வகைத்திணைத் துறைகள்

14. கூதிர்ப் பாசறை வேனிற் பாசறை
ஏரோர் களவழி தேரோர் களவழி
முன்றேர்க் குரவை பின்றேர்க்குரவை
வேலின் வென்றி தோலின் வென்றி
அரச வாகை முரச வாகை
வாணிக வாகை வேளாண் வாகை
அவிப்பலி அறங்கூர் அவைய முல்லை
அரசினை அளித்தல் கடிமனை நீத்தல்

படிமை ஒழுக்கம் காவல் முல்லை
காமங் கடிதல் அருளின் மிகுதல்
பொருளொடு புணர்தல் அன்ன பிறவும்
மன்னிய வாகைத் துறையென வழங்குப

## காஞ்சித்திணை இயல்பு

15. இன்பமும் பொருளும் இளமையும் யாக்கையும்
மன்பதை பிறவும் மன்னா தனவெனக்
கண் கூடாக நிகழ்வது காட்டல்
பெருந்திணைப் புறனாப் பிறங்கும் மரபின்
கருதருங் காஞ்சித் திணையென மொழிப

## காஞ்சித் திணைத் துறைகள்

16. கூற்றுவன் தேற்றமும் முதியோர் தோற்றமும்
புண்கிழித்து முடியும் மறனும் புண்ணோற்
பேஎய் ஓம்பலும் மனைவி பேய்க் கடிதலும்
இன்னனென் றிரங்கும் மன்னையும் இன்னது
பிழைப்பினிது வாகியர் எனும்வஞ் சினமும்
கணவனைத் தீர்த்த வேலின் மனைவி
தானு மடிதலும் மகட்பா லிகலும்
தலையொடு முடிதலும் மாய்ந்த மகனைச்
சுற்றஞ் சுற்றலும் பூசல் மயக்கமும்
தாங்கரும் பையுளும் தபுதார நிலையும்
மூதா னந்தமும் முதுமொழிக் காஞ்சியும்
கையறு நிலையும் பாலை நிலையும்
முதுபா லையும் தலைப்பெயல் நிலையும்
குற்றிசை குறுங்கலி அன்ன பிறவும்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தலும்
உலகநிலை யாமையைப் புலனுறத் தெரிக்கும்
துணையகல் காஞ்சித் துறையெனச் சொல்லுப

## பாடாண்டினை பொதுவியல்பு

17. வெட்சி முதலாய அறுவகைத் திணையுள்
மாட்சிமை புரிந்த மறவர்தம் சீர்த்திகள்
புறத்திணை மருங்கின் இயற்பெய ரொடுவரும்
புரைதீர் காமப் பகுதியொடு, பண்பும்
வண்மையும் வாய்ந்த குடிப்பிறந் தோரைப்

பரவுதல் புகழ்தல் எனும்எண் வகையாப்
பாடுபெறும் ஆளுமை பற்றிப் புலவோர்
போற்ற நிகழ்வது கைக்கிளைப் புறனாம்
பாடாண் டிணையெனப் பன்னுவர் நூலோர்

## சிறப்பியல்பு

18. கடவுளர் பக்கத்துக் காமப் பகுதியும்
குழவி மருங்கிற் கூறும் பகுதியும்
தெய்வத்தொ டொப்ப மக்களைச் சார்த்திச்
சொல்லும் பகுதியும் விண்மீன் வானம்
மாமழை மூன்றையும் தெய்வ மாக
வாழ்த்தலும் பாடாண் பாற்படும் என்ப

## பாடாண்டிணைத் துறைகள்

19. கொடுப்போர் எத்திக் கொடாஅர்ப் பழித்தல்
கடைநிலை கண்படை நிலையே விளக்குநிலை
பெருமங் கலமிரு மண்ணுமங் கலமே
இயன்மொழி வாழ்த்து வாயுறை வாழ்த்து
புறநிலை வாழ்த்து செவியறி வுறூஉ
கைக்கிளை துயிலெடை நிலையே குடைநிலை
பாணர் கூத்தர் விறலி பொருநரை
வள்ளியோர் பாற்பெரும் வளம்பெறச் செலுத்தும்
ஆற்றுப் படையே பரிசில் கடாநிலை
பரிசில் விடைவாள் மங்கலம் ஓம்படை
பிறவும் பாடாண் டிணைக்கமை துறையே

## புறனடை

20. பெருகுபே ராற்றிடை நீருண வகுத்த
துறைபோல் புறத்திணை ஒழுகலா றுணரச்
சுருங்கக் கிளந்த துறைப்பொருள் விளக்கி
அவற்றது மருங்காய் அமைவன வெல்லாம்
தெரிந்தனர் உணர்த்தல் தெள்ளியோர் கடனே

# ஆசிரியரின் இலக்கண நூல்கள்

## தொல்காப்பிய ஆராய்ச்சிக் காண்டிகை உரை

1. எழுத்துப்படலம் – (இரண்டாம் பதிப்பு அச்சில்)
2. சொற்படலம்
3. பொருட்படலம் I II III தொகுதிகள்

## தென்னூல் புதிய இலக்கணம் கி . மு. முதல் 1991 வரை

1. எழுத்து & சொற்படலம் குறிப்புரையுடன்
2. இலக்கியப் படலம்

## இலக்கணக் கலைச்சொல் விளக்க அகராதி

1. எழுத்திலக்கணக் கலைச் சொற்பொருள் விளக்க அகராதி
2. சொல்லிலக்கணக் " " "
3. யாப்பிலக்கணக் " " "
4. அகப்பொருளிலக்கணக் கலைச் சொல், கிளவி – துறை விளக்க அகராதி
5. புறப்பொருளிலிக்கணக் கலைச்சொல் துறை விளக்க அகராதி

1. மடைமாறிய தமிழ் இலக்கண நூல்கள்
2. மொழியாக்க நெறி மரபிலக்கணம்

மொட்டுமலரும் - சொற்பொருள் ஆய்வு விளக்கம்

I II III மூன்று தொகுதிகள் 3000 சொற்களுக்கு விளக்கந் தரப் பெற்றுள்ளன.

1. செய்யுள் இலக்கணம் (இரண்டாம் பதிப்பு அச்சில்)
2. மொழி இலக்கண வரலாற்றுச் சிந்தனைகள் – கட்டுரை



இந்நூலாசிரியர் தஞ்சாவூர் கரந்தைநகரில் விசாலாட்சி சந்திரசேகரனார்க்கு இரண்டாவது மகனாக 18.1.1924இல் பிறந்தார். கரந்தைத் தமிழ்ச் சங்கப் புலவர் கல்லூரியில் பயின்று 1950 இல் புலவர் பட்டயம் பெற்று அக்கல்லூரியிலேயே பேராசிரியராகவும் துணை முதல்வராகவும் பணியாற்றி 1982 இல் பணியினின்று ஓய்வு பெற்றார்.

பின்னர்த் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் சங்க இலக்கிய அகராதித்துறையில் பணியாற்றினார். கரந்தைத் தமிழ்ச் சங்கப் பணிகளிலும் நூல் வெளியீடுகளிலும் பங்கேற்றும் "தமிழ்ப் பொழில்" பதிப்பாசிரியராகவும் அமர்ந்து தொண்டாற்றி வருகிறார்.

தஞ்சை தொல்காப்பியர் கழகத்தின் தலைவராக இருந்து பல்லாண்டுகள் தொண்டு புரிந்தார். "கரந்தைக் கோவை" முதலிய இலக்கியங்களையும் "புலவருள்ளம்" "ஆதிமந்தி" முதலிய கவிதை நாடகங்களையும் படைத்துள்ளார். இவை தமிழகப் பல்கலைக் கழகங்களில் இளங்கலை, முதுகலைப் பாடநூல்களாக ஏற்கப்பெற்றுள்ளன. பல்வேறு இயல், இசைக்கருத்தரங்குகளில் பங்கேற்றுக் கட்டுரைகள் அளித்துள்ளார் இலக்கண இலக்கிய ஆய்வுக்கட்டுரைகள் பலவரைந்துள்ளார் பன்னூறு கவியரங்குகளித் பங்கேற்றும் தலைமை தாங்கியும் கவிதைப் பணியாற்றியுள்ளார். தமிழிசைப் பாடல்கள் பல படைத்துள்ளார். வானொலியில் பல இலக்கியப் பேச்சுகள் நிகழ்த்தியுள்ளார். நாடகங்களில் நடித்துள்ளார். தஞ்சை சரசுவதி மகால் நூலகத்திற்குப் பல நூல்கள் பதிப்பித்துத் தந்துள்ளார்.

தொல்காப்பியம் மூன்றதிகாரங்கட்கும் அறிவியல் நோக்கில் ஆராய்ச்சிக் காண்டிகையுரை வரைந்து வெளியிட்டுள்ளார். தென்னூல் என்னும் பெயரில் புதிய இலக்கண நூலைப் படைத்துள்ளார். முத்தமிழ்த் தொண்டாற்றி வரும் இவருக்கு இலக்கிய மன்றங்கள் பல பாவலரேறு, கவிஞர்கோ, செஞ்சொற் கவிவல்லவன், தொல்காப்பியப் பேரறிஞர், தொல் காப்பியச் சுடர், தொல்காப்பியச் செம்மல் முதலிய பட்டங்கள் வழங்கிப் பாராட்டியுள்ளன. தமிழக அரசு பாரதிதாசன் விருதும், மதுரைப் பல்கலைக்கழகம் தமிழ்ப் பேரவைச் செம்மல் விருதும் வழங்கிச் சிறப்பித்துள்ளன. உலகைத் தமிழாராய்ச்சி நிறுவனம் விருதளித்துப் பாராட்டியுள்ளது.

இந்நாள் இருவகை வழக்கிலும் பயின்று வரும் சொற்களுள் ஏறத்தாழ மூவாயிரம் சொற்களுக்குப் பொருள் விளக்கங்கள் தரும் "மொட்டும் மலரும்" என்னும் மூன்று தொகுதிகளும், எழுத்து, சொல், பொருள், யாப்பு பற்றிய இலக்கணக் கலைச் சொற்பொருள் விளக்க அகராதிகளும், "மொழியாக்க நெறி மரபிலக்கணம்", "மடைமாதிய தமிழ் இலக்கண நூல்கள்" "மொழி இலக்கண வரலாற்றுச் சிந்தனைகள்" என்னும் நூல்களுடன் "புறப்பொருள் இலக்கணக் கலைச்சொல்தொகை விளக்க அகராதி", "இருபெருங் கவிஞர்கள்" ஆகிய நூல்கள் இப்பொழுது வெளிவருகின்றன.

- தமிழ்த் தொண்டர் கோ.முத்துப்பிள்ளை